கடும் பஞ்சம் நாட்டைத் தாக்கியது. இப்பஞ்ச காலத்தில் டச்சு வணிகர்கள் பலர் இங்கிருந்து ஆண்களை அடிமைகளாக அழைத்துச் சென்று வெளிநாடுகளில் விற்றார்கள். சொக்கநாதர் அனைத்தையும் சமாளித்து மக்களுக்கு ஆதரவாக நின்றார்.

## 10. மூன்றாம் முத்துவீரப்பர் (கி.பி. 1682-1689)

சொக்கநாதருக்கும் மங்கம்மாளுக்கும் மகனாய்ப் பிறந்தவர் இவர். இவர் காலத்தில் நாட்டைச் சுற்றியும் பகைவர் சூழ்ந்திருந்தனர். சொக்கநாதர் காலத்திலேயே இந்நிலைதான். தஞ்சை நாயக்கரும், சேதுபதி மன்னரும், செஞ்சி நாட்டவரும், மைசூர்க்காரரும் பலவகையில் இவருக்குத் தொல்லை கொடுத்து நாட்டின் பெரும் பகுதியை அவர்கள் வசம் பிடித்துக் கொண்டனர். இவரது ஆட்சியில் அவுரங்கசீப் தனது ஒற்றைச் செருப்பை ஊர்வலமாகவிட்டு கப்பம் வசூலித்தாராம். மான உணர்ச்சி மிக்க முத்து வீரப்பர் அச்செறுப்பைத் தன்காலில் அணிந்து கொண்டு உங்கள் மன்னர் ஒற்றைச் செருப்பு மட்டும் அனுப்பியுள்ளாரே இன்னொரு செருப்பு எங்கே என முஸ்லிம் படைத் தலைவனிடம் கேட்டாராம். இதனை அறிந்து அவுரங்கசீப் செருக்கு அடங்கியதாகக் கூறுவர். இவர்காலத்தில் இராமநாதபுரம் கிழவன் சேதுபதி தனியரசு காண முயன்றார்.

கிறித்தவ சமயம் ஓரளவிற்குச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தது. இவர் மரணம் அடையும் போது இவர் மனைவி முத்தம்மாள் கருவுற்றிருந்தார். எனவே மாமியார் மங்கம்மாளின் ஆலோசனைப்படி உடன்கட்டை ஏறாது குழந்தை பிறக்கும் வரை வாழ்ந்து குழந்தை பிறந்த ஒருவாரத்தில் பன்னீர் குடித்து ஜன்னி கண்டு இறந்தார். இக்குழந்தையே விஜயரங்க சொக்கநாதர் ஆவார். இவர் குழந்தையாக இருந்தமையால் இவர் சார்பில் மங்கம்மாள் நாட்டை ஆண்டார்.

## 11. இராணி மங்கம்மாள் (கி.பி. 1689-1705)

*மூன்று மாதக் குழந்தையான விஜயரங்க சொக்க நாதருக்கு அரசு பட்டம் கட்டி அவர் சார்பாக மங்கம்மாள் ஆட்சியைத் திறம்பட நடத்தினார். இத்தருணத்தில் மாவீரன் சிவாஜி மரணமடைந்துவிட்டதால் அவுரங்கசீப் அச்சம் நீங்கி தென்னகத்தின் பால் தனது ஆதிக்கத்தை விரிவுபடுத்த முயன்றான். மைசூர் மன்னர் சிக்கதேவ ராயரும், தஞ்சை மராத்தியரும் அவுரங்கசீபுக்கு அடிபணிந்தனர். வேறு வழியின்றி மங்கம்மாளும் திறைப்பணம் செலுத்த இசைந்தார். ஆனால் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தன் நாட்டில் முன்பு இழந்த பகுதிகளை எல்லாம் முஸ்லிம் படையுதவியுடன் மீட்டாள். மைசூர், திருவிதாங்கூர் மன்னர்களோடும் அவ்வப்போது மோத வேண்டிய சூழல் இருந்தது.*

*மைசூர் மன்னன் சிக்கதேவராயன் திருச்சிக்கும், தஞ்சைக்கும் ஜீவனாக இருந்த காவிரி நீரை மைசூருக்குத் திருப்பிவிடுவதற்காக அணை ஒன்று கட்டினான். இதனை அறிந்த மங்கம்மாள் தஞ்சை அரசருடன் சேர்ந்து மைசூர் மன்னர் மேல் போர் தொடுக்க முயன்றார். நல்வாய்ப்பாகப் பெருமழை பெய்து அணையை உடைத்தது. கலகமில்லாமல் காவிரி நீர் தமிழகத்திற்குக் கிடைத்தது. மங்கம்மாள் கோயில்கள் பலவற்றுக்கும் அறக்கொடைகள் பல செய்துள்ளாள். பல இடங்களில் சாலைகளும், சத்திரங்களும் அமைத்துள்ளாள். இன்றும் பல சிற்றூர்களில் மங்கம்மாள் சாலை என்ற பெயரிலேயே அவை வழங்கப்படுகின்றன. கிறித்தவ சமயத்திற்கும், பள்ளிவாசல்களுக்கும் நிலக்கொடை கொடுக்கப்பட்டது.*

*மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்திற்கு எதிரில் அம்மன் சன்னதிக்கு முன் நகரா மண்டபம் மங்கம்மாள் காலத்தில் கட்டப்பட்டது. இம்மண்பத்தின் ஒரு தூணில் மங்கம்மாள் அவரது பெயரன் விஜயரங்க சொக்க நாதருடன் நிற்கும் சிற்பம் உள்ளது. இவர் திருப்பரங்குன்றத்தில் முன்*

மண்டபம் கட்டினார். அதில் ஒரு தூணில் முருகன், தேவசேனைத் திருமணக் காட்சி சிற்பமாக இருக்க, அதன் எதிர் தூணில் மங்கம்மாள் சிற்பம் அதை வணங்கிய நிலையில் உள்ளது. மீனாட்சி கோயிலில் . கிளி மண்டபத்தின் எதிரில் ஒரு சிறிய விதானப் பகுதியில் மங்கம்மாள் காலத்தில் தீட்டப்பட்ட ஓவியம் ஒன்று உள்ளது. இவ்வோவியத்தில் மீனாட்சி அன்னையின் திருக்கல்யாண நிகழ்ச்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. இக்காட்சியை மங்கம்மாளும் விசயரங்க சொக்கநாதரும் கண்டுகளிப்ப தாக உள்ளது. இவ்வுருவங்களின் கீழ் தெலுங்கிலும் தமிழிலும் பெயர்க் குறிப்புகளும் எழுதப்பட்டு உள்ளன. ஒருபுறம் தளவாய் நரசப்பய்யர் நிற்கிறார்.

மதுரையில் இன்று காந்தி அருங்காட்சியகம் செயல்பட்டு வரும் தமுக்கம் கட்டடம் மங்கம்மாளின் கலைப் பணியாகும். கோடைக்காலத் தங்குமிடமாகவும் வீர விளையாட்டுகளைக் கண்டுகளிக்கும் இடமாகவும் அது பயன்பட்டது. மீனாட்சி கோயிலின் அருகிலேயே இன்றைய சந்தைக்கு அருகில் ஒரு மாளிகை மங்கம்மாளால் கட்டப்பட்டிருந்தது. இன்றும் அது உள்ளது. காவல்துறை ஆணையர் அலுவலம் செயல்படும் கட்டடங்கள் சிலவும் மங்கம்மாள் காலத்ததே. புகைவண்டி நிலையத்திற்கு எதிரில் இன்று செயல்பட்டு வரும் மங்கம்மாள் சத்திரம் பிற்காலத்தில்அவர் நினைவாக எடுக்கப்பட்ட கட்டடமாகும்.

## 12. விஜயரங்க சொக்கநாத நாயக்கர் (கி.பி. 1706 – 1732)

மங்கம்மாளுக்குப் பின் அவரது பெயரர் விஜயரங்கச் சொக்கநாதர் தனது 17வது வயதில் அரசுப் பொறுப்பை ஏற்றார். அவர் எதிலும் அக்கறை காட்டாத துறவு மனப்பான்மையில் இருந்தார். இதனால் இவரைச் சுற்றியிருந்த தளவாய் கஸ்தூரி ரங்கய்யாவும், பிரதானி வெங்கட கிரு ணய்யாவும் வரிச் சுமையை அதிகரித்து மக்களை வாட்டி வதைத்தனர். கொடை நிலத்துக்குக் கூட வரி வசூலித்த காரணத்தால் ஒரு ஊழியன் கோயில்

கோபுரம் ஏறி விழுந்து அறப்போர் முறையில் உயிர்விட்டான். அதன் பிறகு அவர்கள் கொட்டம் அடங்கியது.

கிழவன் சேதுபதியின் காமக்கிழத்திக்குப் பிறந்த பவானி சங்கரனால் இராமநாதபுரம் பகுதியில் அமைதி குலைந்தது. ஒருவாறாக பவானி சங்கரன் கொல்லப்பட்ட பின்பு இராமநாதபுரம் சீமை இரண்டாகப் பிரிக்கப்பட்டு இராமநாதபுரம், சிவகங்கை என இரு மன்னர்களுக்கு உரியதாயிற்று. விஜயரங்க சொக்கநாதரின் அளவிடற்கரிய இறைபக்தி அவரை அரசாட்சியைப் புறக்கணிக்கத் தூண்டிவிட்டது. கோயில்களுக்குப் பல திருப்பணிகள் செய்தார். வில்லாபுரங்கோயில் இவரால் திருப்பணி கண்டது. 1732இல் இவர் மறைந்தார். இவரது தந்தத்தால் ஆன உருவச்சிலை அரசி மீனாட்சியுடன் திருவரங்கம் அரங்க நாதர் கோயில் இடப்பக்கத் திருச்சுற்றில் இடம் பெற்றுள்ளது.

## 13. மீனாட்சி அரசி (கி.பி. 1732-1736)

மதுரை நாயக்க மரபின் கடைசி ஆட்சியாளர் மீனாட்சி அரசியாவார். இவர் விசயரங்க சொக்க நாதரின் பட்டத்தரசி. இவர்களுக்கு வாரிசுகள் இல்லை. பங்காரு திருமலையின் மகன் விஜயகுமாரனை வாரிசு ஆக ஏற்று ஆட்சி நடத்த முயன்றாள். போதிய அரசியல் அனுபவமும் அறிவாற்றலும் இன்மையால் மீனாட்சியால் மங்கம்மாள் போல் ஆட்சி செய்ய இயலவில்லை. உட்பகையும் ஆர்க்காட்டு நவாப்பின் படையெடுப்பும் பல நெருக்கடிகளைக் கொடுத்தன. 1736இல் சந்தா சாகிப் (ஆர்காட்டு நவாபின் மருமகன்) மீனாட்சியுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு திருச்சி கோட்டையைக் காப்பதாகக் கூறினான். இதற்கென ஒரு கோடி ரூபாய் பெற்ற போதும் அவன் வஞ்சித்தான். இதனைத் தாங்க முடியாத மீனாட்சி அரசி தற்கொலை செய்து கொண்டாள். உடனே சந்தாசாகிப் திருச்சி, திண்டுக்கல், மதுரைப் பகுதிகளைத் தன்வசம் ஆக்கிக் கொண்டான். மீனாட்சி அரசியின் மரணத்துடன் மதுரை நாயக்கர் அரச மரபு முடிவுக்கு வந்தது.

# 12. நாயக்கராட்சிக்குப் பின்

சந்தா சாகிப்பின் நம்பிக்கைத் துரோகத்தால் ஏமாற்றமடைந்த மீனாட்சி அரசி தன் வாழ்க்கையை முடித்துக் கொண்டபின் இரக்கமே இல்லாத சந்தா சாகிப் திண்டுக்கல், திருச்சி, மதுரை ஆகிய பகுதிகளைத் தன் வசப்படுத்திக் கொண்டான். தனது இரண்டு சகோதரர் களான புதாசாகிப், சதக் சாகிப் ஆகியோரை முறையே மதுரை, திண்டுக்கல் பகுதிகளின் ஆளுநர்களாக அமர்த்தினான். இத்தருணத்தில் மதுரைக் கோயிலைப் பாதுகாப்பதற்காக மீனாட்சி சுந்தரேசுவரரையும் கூடல் அழகர் திருமேனிகளையும் எடுத்துக் கொண்டு பட்டர்களும், பரிசனங்களும் சேதுபதிகளிடம் அடைக்கலமாகி மானா மதுரையில் தங்கினர். இரண்டாண்டு காலம் சேதுபதி இவர்களை ஆதரித்தார்.

இந்நிலையில் பங்காரு திருமலை மற்றும் தஞ்சை மராத்திய அரசரின் கோரிக்கையை ஏற்று சதாராவிலிருந்து மராத்தியரின் பெரும்படை ராகோஜி போன்ஸ்லே தலைமையில் (1740ல்) தமிழகம் வந்து ஆர்க்காடு நவாப்பை வட ஆர்க்காடு மாவட்டம் தாமல்செரு என்ற இடத்தில் கொன்றது. சிறிது நாளில் மராத்தியப் படையினர் திருச்சி கோட்டையைக் கைப்பற்றி சந்தாசாகிப்பின் இரண்டு சகோதரர்களையும் கொன்றதுடன், சந்தா சாகிப்பையும் சிறைப்பிடித்துச் சதாராவுக்குக் கொண்டு சென்றனர். மராத்தியர்கள் பங்காரு திருமலையின் அரசுரிமைக் கோரிக்கையை ஏற்காது முராரிராவ் என்பவரைத் தமது சார்பில் மதுரையின் ஆளுநராக நியமித்துச் சென்றனர்.

அவ்வகையில் சிலகாலம் மதுரை மராத்தியர் ஆட்சிக்கும் (கி.பி. 1740-43க்கு இடையில்) உட்பட்டது.

முராரிராவ் தன் காலத்தில் அப்பாச்சி நாயக்கர் என்பவரை 2000 குதிரை வீரர்களுடன் அனுப்பி வைத்து மானாமதுரையில் சேதுபதியின் பாதுகாப்பில் இருந்த இறை உருவங்களை மதுரைக்குக் கொண்டு வந்து கோயில் வழிபாடுகள் தொடர வழிவகுத்தார் என்று மதுரைத் தல வரலாறு கூறுகிறது. மராத்தியர்களின் பின்னடைவு காரணமாகவும் ஐதராபாத் நிஜாமின் எழுச்சி காரணமாகவும் தென்னகம் நிஜாமின் ஆட்சிக்குட்பட்டது. கர்நாடக நவாப் அன்வருதீன் தமிழகத்தின் ஆளுநரானார். அவரது இரண்டு மகன்கள் மாபுஸ்கான், முகமதுஅலி இருவரும் சுமார் 10 ஆண்டுகள் மதுரையை நிருவகித்தனர். கி.பி.1748இல் அன்வருதீன் கொல்லப்பட்டவுடன் கர்நாடகத்தின் உரிமைக்காக முகமது அலிக்கும் சந்தாசாகிப்புக்கும் இடையில் கடும் போட்டி ஏற்பட்டது. இது கர்நாடகப் போர் எனப்பட்டது. இச்சூழலில் மதுரை அவ்வளவாகப் பாதிக்கப்படவில்லை. எனினும், முகமது அலிக்கு ஆதரவு கொடுக்கும் வகையில் உதவ வந்த ஆங்கிலேயரின் செல்வாக்கு மதுரையில் பரவத் தொடங்கியது.

ஆயினும் முகமதுஅலி மதுரைப் பகுதியைச் சந்தா சாகிப் வசம் பறிகொடுத்தான். சந்தாசாகிப்பின் பிரதிநிதியாக ஆலம்கான் கி.பி. 1751 மதுரையை நிருவகித்தான். மதுரையை மீண்டும் கைப்பற்ற கி.பி. 1751இல் கேப்டன் கோப் என்பவனைப் படையுடன் அனுப்பி வைத்தான். அவர்கள் மூன்று மாதம் மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டும் வெல்ல முடியாமல் திரும்பினர். ஓராண்டு ஆட்சிக்குப் பின் ஆலம்கான் மதுரையின் நிருவாகத்தை மயனா என்னும் உறவினனுக்கும், நெல்லைப் பகுதியை நபிகான் என்பவனுக்கும் ஒப்படைத்துவிட்டு தான் திருச்சிக் கோட்டைக்குச் சென்றான். ஆனால் மயனா மதுரைக்

கோட்டையை மைசூராரிடம் விற்று விட்டு திருமோகூர்க்குச் சென்றுவிட்டான். இதனைப் பெற்ற மைசூர் கூகுசாகிப் என்பவன் மதுரைக் கோட்டைக்குள் நுழைந்தான். இதைக் கேள்வியுற்று இராமநாதபுரம் சேதுபதியிடம் வாசல் தளகர்த்தராகப் பணியாற்றிய வெள்ளையன் சேர்வைக்காரரும், சிவகங்கை ஜமீனின் வாசல் காரியமான தாண்டவராய பிள்ளையும் பெரும் படையுடன் வந்து மதுரையை முற்றுகையிட்டனர். சில மாதங்களில் கூகுசாகிப் மதுரையை சேதுபதிகளிடம் ஒப்படைத்துவிட்டு திண்டுக்கல்லுக்குச் சென்றுவிட்டார். வெள்ளையன் சேர்வைக்காரரும், தாண்டவராயப் பிள்ளையும் மதுரைக் கோட்டைக்குள் நுழைந்து கோயிலைத் திறந்து வழிபாட்டைத் தொடரச் செய்தனர். நாடு அரசன் இன்றி இருத்தலாகாது எனக்கருதி பங்காரு திருமலையின் மகன் விசயகுமாரனை வெள்ளிக்குறிச்சியிலிருந்து கொண்டு வந்து மீனாட்சி கோயிலில் முடி சூட்டுவித்து செங்கோலும் கொடுத்து அரசனாக்கினார். விசயகுமாரன் ஒன்றரை ஆண்டுகள் அரசாண்டார். ஆனால் மீண்டும் மயனாவும், நபிகான், மகதிமியா ஆகிய மூவரும் விசயகுமாரனை வெள்ளிக்குறிச்சிக்கே விரட்டிவிட்டு மதுரைக் கோட்டையைப் பிடித்துக் கொண்டனர். அதை மீட்க வெள்ளையன் சேர்வைக்காரரும், கூகுசாகிப்பும் அனுப்பானடி, பனையூர் பகுதியில் தங்கிப் போரிட்டனர். ஆனால் முயற்சி வெற்றி பெறவில்லை. இருவரும் கொல்லப்பட்டனர். தொடர்ந்து 1754 வரை மயனாவின் ஆட்சியே நீடித்தது.

கி.பி. 1755ன் தொடக்கத்தில் ஆர்க்காட்டு நவாப் முகமது அலி, கர்னல், ஹீரான் என்பவரை மதுரையைப் பிடிப்பதற்காக அனுப்பினர். கிழக்கிந்தியக் கம்பெனியில் அதிகாரியாயிருந்த முகமது யூசுப்கானிடம் 2000 வீரர்கள் ஒப்படைக்கப்பட்டனர். மதுரையிலிருந்து மயனா தப்பி திருமோகூர் (கோவில்குடி) ஓடிவிட்டான். யூசுப்கானின் வீரர்கள் எளிதாக மதுரையைப் பிடித்தனர். கர்னல்

ஹீரான் தொடர்ந்து விடாது மயானாவைத் துரத்தியும் அவன் தப்பி ஓடிவிட்டான். ஹீரான் தவறான முடிவில் கோவிலைக் கொள்ளையிட நத்தம் பகுதிக் கள்ளர்களால் இன்னலுக்கு ஆளானான். தொடர்ந்து மதுரை நிர்வாகத்தில் குழப்பமே நீடித்தது. திருநெல்வேலியிலிருந்து கேப்டன் கெலாட் மதுரைக்கு வந்து நிலைமையைச் சமாளித்தார். இந்நிலையில் 1757இல் ஹைதர்அலி மதுரையைக் கைப்பற்ற எண்ணி சோழவந்தானில் வந்து முற்றுகையிட்டார். மதுரைக் கோட்டையின் வலிமை கண்டு அவர் தோல்வியுடன் திரும்ப வேண்டியதாயிற்று. பல இடங்களில் கொள்ளையிட்ட அவருக்கு யூசுப்கானால் பெருத்த சேதம் ஏற்பட்டது.

யூசுப்கான் மதுரையின் நிர்வாகத்தைச் சீர்படுத்தினார். கோயில் புனிதப்படுத்தப்பட்டு வழிபாடுகள் தொடரப் பட்டன. ஆண்டுக்கு 12,000 பொன் கோயில் செலவுக்காகக் கொடுக்கப்பட்டது. கோபுரத்தின் மீது ஏறி குழப்பம் விளைவித்த பக்கிரி நிசான் என்பவன் நாடு கடத்தப் பட்டான்.

யூசுப்கானே மதுரைப் பகுதியின் ஆளுநராக ஆண்டுக்கு ஐந்து லட்சம் கப்பம் கட்டும் வகையில் அமர்த்தப்பட்டான். பின்னர் ஒன்பது லட்சம் செலுத்த வேண்டும் எனக் கோரப்பட்டது. ஆனால் யூசுப்கான் ஆர்காட்டு நவாப்பின் கீழ் பணியாற்ற மறுத்து ஆங்கிலேயரின் கீழ் பணியாற்ற இசைந்தான். அது இயலாமல் போகவே 1763இல் அவன் பிரஞ்சுக்காரர்களுடன் கூட்டணி சேர்ந்து ஆங்கிலேயரை எதிர்த்தான். இதனால் ஆங்கிலேயர் அவனைப் பிடிக்க எண்ணினர். கர்னல் மோன்சன் தலைமையில் வந்தபடை மதுரைக் கோட்டையை நீண்ட நாள் முற்றுகையிட்டும் யூசுப்கானை ஒன்றும் செய்ய இயலாது பின்வாங்கியது. மேஜர் காம்பெல் தலைமையில் இரண்டாவது முறையாக மதுரைக் கோட்டை ஆங்கிலேயரால் முற்றுகையிடப்பட்டது. இம்முறை பிரெஞ்சு படைத் தலைவன் மர்ச்சண்டின் துரோகத்தால் யூசுப்கான் காட்டிக்

கொடுக்கப்பட்டான். கோட்டை வீழ்ந்தது. துரோகம் வென்றது. மதுரை ஆங்கிலேயர் வசமாயிற்று. 1764 அக்டோபரில் யூசுப்கான் தூக்கிலிடப்பட்டான்.

யூசுப்கான் தூக்கிலடப்பட்ட பின் ஆறு ஆண்டுகள் அபிரல்கான் சாகிப் என்பவன் வருவாய் ஆளுநராகச் செயல்பட்டான். அதன் பின் பலர் இதன் நிர்வாகத்தை மேற்கொண்டனர். கி.பி. 1781இல் ஆங்கிலேய அதிகாரியாக ஜார்ஜ் புரோக்டர் என்பவர் நியமிக்கப்பட்டார். இவரே மதுரையின் முதல் கலெக்டர் என்றும் கூறலாம். கி.பி. 1783இல் இப்பதவிக்கு திரு.ஐலெஸ் இர்வின் அமர்த்தப்பட்டார். 1783இல் கர்னல் புலர்டன் தலைமையில் படை வந்து மேலூர், சிவகங்கை, நெல்லை பகுதிகளில் தலை தூக்கிய கலகத்தை அடக்கி அமைதியை நிலைநாட்டியது. கி.பி. 1801இல் ஆர்க்காட்டு நவாபிடம் ஏற்பட்ட உடன்படிக்கை யின்படி தமிழகம் முழுவதும் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் கொண்டு வரப்பட்டது.

## ஜோகன் பிளாக்பர்னின் பங்களிப்பு

இவர் கி.பி. 1834 - 1842 வரை மதுரை மாவட்ட ஆட்சியாளராகப் பணியாற்றினார். இன்றைய மதுரையின் நகரமைப்புக்குப் பெருந்தொண்டாற்றியவர் இவரே. மதுரை நகரில் பாண்டியர் கால அகழியும், நாயக்கர் காலக் கோட்டையும் அழிக்கப்பட்டு நிரவப்பட்டது இவரால் தான். கோட்டையும் அகழியும் இடித்து நிரவப்பட்டு இன்றைய வெளிவீதிகளாகப் பரிமாணம் பெற்றன. மாரட் வீதிகளும், பெருமாள் மேஸ்திரி வீதிகளும் அமைந்தன. மாரட் என்பவர் அளவை அலுவலர். பெருமாள் அவருக்கு உதவிய மேஸ்திரி. இவ்விருவர் பெயர்களிலும் தெருக்கள் அமைந்தன. இதனால் நாலாபுறமும் நகரம் விரிவடைந்தது. இடிக்கப்பட்ட கோட்டைக் கற்களால் வைகைக் கீழ்ப்பாலம் கட்டப்பட்டது. அரண்மனைப் பகுதியிலிருந்து எடுக்கப்பட்ட கல் யானை ஒன்று வைகைக் கீழ்ப் பாலத்தின் அருகில் நிறுவப்பட்டது. இதுவே இன்றைய யானைக்கல்

என்பர். பிளாக்பர்னின் அரும்பணிகளைப் பாராட்டி அவர் நினைவாக ஒரு விளக்குத் தூண் நிறுவப்பட்டது. இன்றைய தெற்குமாசி வீதியும், கீழமாசி வீதியும் சந்திக்கும் இடத்தில் அமைக்கப்பட்ட இவ்விளக்குத் தூணின் கீழ் எழுதப்பட்ட கல்வெட்டு இன்று மண்ணுக்குள் புதைந்துள்ளது.

# 13. மதுரை

## மீனாட்சி அம்மன் கோவில்

உலகம் ஒரு நிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க – உலகனைத்தும்
தான்வாட வாடாததன்மைத்தே தென்னவன்
நான் மாடக் கூடல் நகர்

என்பது புறத்திரட்டில் காணும் ஒரு பாடல். இத்தகு மிகு புகழுக்கும் மேன்மைக்கும் பல காரணங்கள் இருப்பினும் இந்நகரில் அமைந்துள்ள எழில்மிகு மீனாட்சி ஆலயமும் ஒரு காரணமாக இருக்கலாம். உலகத்து சுற்றுலாப் பயணிகளையும் உள்நாட்டு உள்ளூர் பக்தர்களையும் பரவசப் படுத்தும் ஒரு மாபெரும் வரலாற்றுக் கலைக் கருவூலமாக இக்கோயில் திகழ்கிறது. இதற்கென்று நீண்ட வரலாறும் உண்டு.

கடம்ப மரங்கள் நிறைந்த வனப் பகுதியில் சுயம்பு லிங்கம் ஒன்றைக் கண்ட இந்திரன் தெய்வத் தச்சனாகிய மயனின் உதவி கொண்டு இந்திர விமானத்தை உண்டாக்கியதாகப் பழங்கதை கூறுகிறது. இது வெறும் கற்பனை என்றே வரலாற்றாய்வாளர்கள் கொள்வர். மதுரைக் காஞ்சி என்னும் சங்க இலக்கியம் மழுவேந்திய இறைவனின் தலைமையில் பல தெய்வங்களின் வீதி உலா தினமும் நடைபெறும் எனக் கூறுவது கொண்டு சங்க காலத்திலேயே மதுரையில் நிறுவனப்படுத்தப்பட்ட ஒரு கோயில் இருந்தது என்பதை அறியலாம். ஆனால் அன்றைய கோயில் இன்று காணும்படியாக இல்லை.

கி.பி. 7ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் மதுரைக்கு வந்த திருஞானசம்பந்தர் தனது மதுரைப் பதிகத்தில் இங்குள்ள கோயில் இறைவனை ஆலவாய் இறைவன், ஆலவாய்ச் சொக்கன், ஆலவாய் தம்பிரானார் என்று விளித்துப் பாடுகிறார். இதன் மூலம் மதுரையின் ஒரு பகுதி ஆலவாய் எனப் பெயர் பெற்றது என்றும் அறியலாம். ஹாலஸ்ய சேத்திரம் என்பது ஆலவாய் என்பதன் வடமொழி வடிவமே. இக்கோயில் கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் மிகச் சிறியதாகவும் கருவறை, அர்த்த மண்டபம் ஆகிய அடிப்படை அங்கங்களைக் கொண்டும் கட்டப்பட்டிருக் கலாம். இங்குள்ள பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகளில் கூட கோயில் இறைவனின் பெயர் திரு ஆலவாயுடைய நாயனார் என்றே குறிப்பிடப்படுகிறது. முற்பாண்டியர் காலக் கல்வெட்டுகளோ, கற்சிற்பங்களோ தெய்வ உருவங்களோ இக்கோயிலில் இல்லாதது இது பலமுறை மாற்றிக் கட்டப்பட்ட கோயில் என்பதை உறுதிப் படுத்துகிறது.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு இலக்கியமான கல்லாடம் மதுரைக் கோயிலையும் அங்கு நடந்த 30 லீலைகளையும் (திருவிளையாடல்கள்) பற்றிக் கூறுகிறது. இது எட்டு யானைகள் தாங்கும் இந்திர விமானத்தைக் கூறுவதுடன், உமையுடன் உறையும் இறைவனை மூலகாரணன் என்றும் குறிப்பிடுகிறது.

தேவாரப் பாடல்களில் இறைவியின் பெயர் அங்கயற் கண்ணி என்றே கூறப்படுகிறது. இதன் சமஸ்கிருதப் பெயரே மீனாட்சி என்பது. இடைக்கால பாண்டியர் கல்வெட்டுகள் இத்தேவியைத் திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார் என்று குறிப்பிடுகின்றன. இதுவே அன்று மீனாட்சி அன்னையின் பெயராக வழங்கப்பட்டுள்ளது. கிறித்தவக் கழகப் பாதிரியார்களின் குறிப்புகளிலும் கூட சொக்கநாதர் கோயில் என்றே சுட்டப்பட்டிருக்கிறது. சுந்தரேசுவரர் எனும் சமஸ்கிருதப் பெயர் மிகவும் பிற்காலத்தியதே. கோயில் ஸ்தல புத்தகத்திலும் திரு

ஆலவாயுடைய தம்பிரானார் கோயில் என்ற குறிப்பையே காண்கிறோம்.

கல்லாடத்தில் இடம்பெறும் 30 திருவிளையாடல்கள் பற்றிய செய்திகள் சார சமுச்சயம் என்னும் வடமொழி நூலைத் தழுவி எழுதப்பட்டவை ஆகும். கி.பி. 13 ஆம் நூற்றாண்டளவில் பெரும்பற்றப் புலியூர் நம்பியால் ஒரு திருவிளையாடற்புராணம் எழுதப்பட்டது. அடுத்து கி.பி 17ஆம் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவரால் ஒருதிருவிளையாடல் புராணம் எழுதப்பட்டுள்ளது.

மதுரைத் தலவரலாறு, ஸ்தல புத்தகம், மதுரை ஸ்தானிகர் வரலாறு, மதுரை திருப்பணி மாலை ஆகியவற்றின் மூலம் கோயிலின் திருப்பணிகள், இஸ்லாமியர் படையெடுப்பால் ஏற்பட்ட சேதங்கள், தடைப்பட்ட பூசைகள் ஆகியவற்றை அறிய முடிகிறது. அதன்படி முதன் முதலாகக் குலசேகர பாண்டியன் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. பழங்கதைகளின்படி இந்திரனால் கட்டப்பட்டது என்ற போதிலும் கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கம் முதல் அதாவது சங்க காலம் முதல் இக்கோயில் இருந்தது எனலாம். ஆனால் சங்க காலப் பாண்டிய மன்னர்களில் குலசேகர பாண்டியன் என ஒருவரும் குறிப்பிடப் படவில்லை. எனவே குலசேகர பாண்டியனால் சங்க காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டது எனல் பொருந்தாது.

இங்குள்ள கல்வெட்டுகளிலேயே தொன்மையானது என்னும்படி முதலாம் ஜடாவர்மன் குலசேகரன் (1190-1216) கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. இதில் மீனாட்சி அம்மன் கோயில், திருக்காமக் கோட்டமுடைய ஆளுடைய நாச்சியார் எனப் பெயர் குறிப்பிடப்படுகிறது. எனவே இந்தக் குலசேகர மன்னன் காலத்தில் தான் மீனாட்சி அம்மனுக்கென்று தனிக் கோயில் சிவனுக்கு இணையாகக் கட்டப்பட்டது எனலாம். அதற்கு முன்பாக அம்மனும்

பரிவார தெய்வங்களில் ஒன்றாக வைத்தே வழிபடப் பட்டிருக்கவேண்டும். இதுவே தமிழகம் எங்கும் காணப்படும் நிலை. எடுத்துக்காட்டாக முதல் கட்டுமானக் கோயில் என எண்ணத்தகும் காஞ்சி கைலாச நாதர் கோயிலிலோ, மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலிலோ அம்மனுக்கெனத் தனிக் கோயில் இல்லை. தென்னக மேரு என உயர்ந்து நிற்கும் தஞ்சைப் பெருங் கோயிலிலும் அம்மனுக்கெனத் தனிக் கோயில் இராசராசனால் கட்டப்பெறவில்லை. அவனுக்கு 200 ஆண்டுகட்குப் பிறகே பெரிய நாயகி அம்மனுக்குத் தனிக் கோயில் கட்டப்பட்டது. எனவே மேற்சொன்ன கல்வெட்டிலும் குலசேகரன் கட்டியதாக ஸ்தல வரலாறு கூறுவதும் மீனாட்சிக்கான தனிக் கோயிலையே எனலாம்.

பொதுவாக தமிழகக் கோயிற் கட்டடக் கலையைப் பல்லவர், பாண்டியர், சோழர், விசயநகரர், நாயக்கர், பாணிகளாக வகைப்படுத்துவர். மதுரை பாண்டிய நாடாகையால் இங்குள்ள கட்டடக் கலையைத் தொடக்கத்தில் பாண்டியன் கலையாகவும், பின்னர் விசயநகரர் நாயக்கர் பாணியாகவும் அமைந்ததாகக் கருதலாம். ஆனால் என்ன காரணத்தாலோ முற்பாண்டியன் கலைப்பாணியின் எச்சங்கள் எதுவும் தற்போதைய மீனாட்சி கோயிலில் இல்லை. சுந்தரேசுவரர் சன்னதியின் நுழைவாயிலுக்கு அருகில் உட்புறம் கிழக்குத் திருச்சுற்றில் உள்ள ஒரு சூரியனார் சிற்பம் மட்டுமே கி.பி. எட்டாம் நூற்றாண்டின் முற்பாண்டியர் கலை அம்சத்துடன் உள்ளது. மற்றவை அந்நியர் படை எடுப்பாலோ, திருப்பணியின் போது மக்களின் அறியாமையினாலோ சேதமுற்று மாற்றப்பட்டு இருக்கலாம்.

தற்போதைய கட்டட அமைப்பு பெரும் பகுதியும் கி.பி. 15-16ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் ஏற்பட்டவையாகும். கி.பி. 1311இல் மாலிக்காபூர் படையெடுப்பின் போது மீனாட்சி அம்மன் சன்னதியும் சொக்கநாதர் சன்னதியும் (கருவறை) மண்ணால் மூடப்பட்டு அர்த்த மண்டபத்தின்

முன்பாகச் சுவர் எழுப்பப்பட்டமையும் பின்னர் வழிபாட்டிற்கு வந்தமையும் வரலாற்றுப் பின்னணியில் ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது.

விஜயநகர ஆட்சி ஏற்பட்டதைத் தொடர்ந்து அழிவுக் குள்ளான கோயிலின் பல பகுதிகளும் புதுப்பிக்கப்பட்டன. அதன் காரணமாகவே இன்றைய பல மண்டபங்களும் தூண்களும் விசயநகரக் கலைப் பாணியுடன் திகழ்கின்றன. இன்றைய நிலையில் கிழக்குக் கோபுரமே காலத்தால் பழமையானதாகும். இதில் கல்காரம் வரை முதலாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியனால் கட்டப்பட்டதாகும் இங்குள்ள கல்வெட்டுகள் இதனை 'சுந்தரபாண்டியன் திருக்கோபுரம்', 'அவனிவேந்த ராமன் திருக்கோபுரம்' எனத் தெரிவிக்கின்றன. அவனிவேந்தராமன் என்பது முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் சிறப்புப் பெயராகும். இக்கோபுரத்தின் இரண்டாம் நிலையில் உள்ள தூண்களில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216) முதலாம் சடாவர்மன் குலசேகரன் (கி.பி. 1190) ஆகியோரின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. எனவே குலசேகரனால் கோபுரப் பணி தொடங்கப்பட்டு ஜடா. சுந்தரபாண்டியனால் முடிக்கப்பட்டது எனக் கருதலாம்.

அடுத்த பழமை வாய்ந்த கோபுரம் மேற்குக் கோபுரம் ஆகும். இது கி.பி. 1323 ஆம் ஆண்டில் பராக்கிரம பாண்டியனால் கட்டப்பட்டதாகும். கோபுரத்தின் உட்சுவரில் உள்ள ஒரு பாடல் கல்வெட்டு இதனை உறுதிப்படுத்துகிறது. தெற்குக் கோபுரம் சிராமலை செவ்வந்தி செட்டியால் 1478இல் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. இக்குடும்பத்தினர் மதுரைக் கோயிலுக்குப் பல அறச் செயல்களைச் செய்துள்ளனர். வடக்குக் கோபுரம் வீரப்ப நாயக்கரால் 16ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. இவரே கம்பத்தடி மண்டபத்தையும் கட்டியவர். பெரிய அளவில் உள்ள வீரபத்திரர் ஊர்த்துவ தாண்டவச் சிற்பங்கள் இவர் பணியே. மொட்டைக்

கோபுரம் என்றழைக்கப்படும் வடக்குக் கோபுரம் வயிநாகரம் நகரத்தாரால் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் புதுப்பித்துக் கட்டப்பட்டது. கம்பத்தடி மண்டபத்தின் நடுவில் உள்ள சிவமூர்த்த சிற்பங்களும் இவர்களால் அமைக்கப்பட்டவை.

இன்று மக்கள் அதிகமாக கிழக்கு நுழைவாயிலாகப் பயன்படுத்தும் அ டசக்தி மண்டபம் திருமலை நாயக்கரின் தேவியர் தோணி, ருத்ரா ஆகியோரால் கட்டப்பட்ட தாகும். அதற்கு எதிரில் உள்ள நகரா மண்டபம் மங்கம்மாளின் பணியாகும். இதில் ஒரு தூணில் மங்கம்மாளும் அவர் பேரன் விஜயரங்கசொக்க நாதரும் சிற்பமாக வடிக்கப் பட்டுள்ளனர்.

மொத்தம் 12 கோபுரங்களும் இரண்டு விமானங்களும் கொண்டு பொலிவுடன் திகழும் இக்கோயில் விசயநகர வேந்தர் மற்றும் மதுரை நாயக்கர் காலக் கட்டடக் கலைக்கும் சிற்பக் கலைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாய்த் திகழ்கின்றது.

கோபுர நிலைக் கால்களில் அமைக்கப்பட்டுள்ள கங்கை, யமுனை என்னும் நதி தேவதைகள் கொடிப் பெண்களாக வடிக்கப்பட்டுள்ளனர். நன்கு வளர்ச்சி பெற்ற நாகபந்தம். நன்கு வளைந்த பூமுனை போதிகை, யாளி சிற்பங்களுடன் கூடிய கூட்டுத் தூண்கள் ஆகியவையும், விமான அதிட்டானங்களில் காணப்படும் கடகவிருத்த குமுதமும் சிலம்பு குமுதமும், வர்க்க பேதங்காட்டும் பாங்கும் நாயக்கர் கலைக்குரிய சிறப்புத் தன்மைகளாகும். இவை இங்குள்ள பல கட்டுமானங்களிலும் காணப் படுகின்றன.

ஆயிரங்கால் மண்டபம் தளவாய் அரியநாத முதலியாரால் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட தாகும். கம்பத்தடி மண்டபம் 1583இல் கட்டப்பட்டுள்ளது.

*இங்குள்ள வீரபத்திரர், காளி சிற்பங்களும் ஆயிரக்கால் மண்டபத்திலுள்ள சிற்பங்களும் நாயக்கர் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகள் ஆகும். திரட்சியான சதைப் பற்றும் விரிந்த அகன்ற மார்பும் கூர்மையான நாசியும் அசாதாரணமான (சுமார் 9-10 அடி) உருவ அமைதியும் அதிபங்கம் என்னும் வகையில் அதிகமான வளைவு நெளிவுகளும் நாயக்கர் சிற்பங்களுக்கே உரியவை. மேலும் நாட்டுப்புற கதைமாந்தர்கள், நாட்டுப் புற மக்களையும் கலை வடிவங்களாகக் காட்டும் முயற்சியும் நாயக்கர் காலத்தில் ஏற்பட்டது. அதன்படி அரிச்சந்திரன், சந்திரமதி, பாம்புப் பிடாரன், குறவன், குறத்தி ஆகியோரின் சிற்பங்களும், ஆயிரங்கால் மண்டபத்தில் இடம் பெற்றுள்ளன. இசைத் தூண்கள் என்னும் கூட்டுத் தூண் அமைப்பும் நாயக்கர் கலை மரபின் குறிப்பிடத்தக்க அம்சமாகும். ஒரே கல்லில் விட்டம் மாறுபாடு கொண்ட பல சிறு தூண்களை வடிக்கும் போது அவற்றைத் தட்டினால் மாறுபட்ட ஒலிகள் வெளிப்படுவது அறிவியல் உண்மை. இதனையே இசைத் தூண்கள் என்பர். மதுரைக் கோவிலில் ஆயிரங்கால் மண்டபத்திலும், வடக்கு கோபுரத்தின் அருகிலும் இத்தகைய தூண்களைக் காணலாம்.*

*இங்குள்ள பொற்றாமரைக் குளம் வரலாற்றுச் சிறப்புக்குரியதாகும். இங்கு தான் சங்கப் பலகை இருந்தது. புலவர்கள் தங்கள் புதிய இலக்கியங்களை இங்கு அறங்கேற்றுவர் என்று கூறுவதுண்டு. ஆனால் ஒவ்வொரு சிவன் கோயிலிலும் சிவகங்கை எனும் தீர்த்தம் அமைக்கப்படுவதுண்டு. அவ்வகையில் அமைந்த இக்குளத்திற்கு வைகையிலிருந்து நிலத்தடியில் சுருங்கை வழியாக கி.பி. 1688 வரையிலும் நீர் வந்ததாகத் தெரிகிறது.*

*புதுமண்டபம், திருமலை நாயக்கரால் கட்டப்பட்டது. அதனையும் உள்ளடக்கி மிகப் பெரியதாகக் கட்டத் துவங்கிய ராயகோபுரம் முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது.*

இப்படி புராண, இலக்கியப் பெருமைகளாலும், கட்டடச் சிற்பக் கலைச் சிறப்புகளாலும் உலகளாவிய புகழ் பெற்ற மீனாட்சி அம்மன் ஆலயம் தூங்கா நகரமானதும், தமிழகத்தின் கலாச்சாரத் தலைநகர் எனும் பெருமை கொண்ட மதுரைக்குக் கிடைத்த அரிய கலைக் கருவூலமாகும்.

## கூடலழகர் திருக்கோயில்

மதுரை நகரில் சங்க காலத்திலேயே திருமால் கோயில் ஒன்று இருந்தது என்பதனை மதுரைக் காஞ்சி மூலம் அறியலாம். 'மாயோன் மேய ஓண நன்னாள்' என வரும் அடியால் திருமாலுக்கு திருவோண நாளில் விழா எடுக்கப்பட்டதை அறிகிறோம். திருமாலே 'துவரைக் கோமான்' எனும் பெயரில் சங்கப் புலவராக வீற்றிருந்ததாகவும் மதுரைக் காஞ்சியின் ஆசிரியர் மாங்குடி மருதனார் குறிப்பிடுகிறார். மதுரைக்குக் கூடல் என்று ஒரு பெயரும் உண்டு. எனவே இங்குள்ள திருமால் கூடல்அழகர் எனப்பட்டார். பரிபாடல் குறிப்பு ஒன்று கூடல் அழகரை 'இருந்தையூர் அமர்ந்த செல்வ' என்று விளிக்கிறது. இங்கு அழகர் இருந்த கோலத்தில் உள்ளதால் இருந்தாவூர் என்பது பின்னாளில் இந்தையூர் ஆனது போலும்.

சிலப்பதிகாரம் மாதரி என்னும் இடைக்குல மடந்தை ஆய்ச்சியர் குரவை முடிந்ததும் வையைக் கரையில் உள்ள திருமாலை வழிபடச் சென்றாள் என்பதை,

> நீடு நீர் வையை நெடுமால் அடியேத்தித்
> தூவித்துறை படியப் போயினாள்

என்ற அடிகளில் காண்கிறோம். இங்குக் குறிப்பிடப்படும் வையை என்பது வையையின் கிளையாயன கிருதமாலை நதியாகலாம். கிருதாமாலை நதி அண்மைக்காலம் வரை நீர்ப்பெருக்கொடு கூடலழகர் கோயிலுக்குத் தெற்கில் ஓடியது. தற்போது வற்றி கழிவுநீர் ஓடையாகிவிட்டது. இப்பகுதியே இருந்தையூராகும். இருந்தையூர் கருங்கோழி

மோசி எனும் சங்கப்புலவர் ஒருவரை இறையனார்களவியல் உரையில் நக்கீரர் குறிப்பிட்டிருக்கிறார். முற்காலப் பாண்டியன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் காலத்தில் பெரியாழ்வார் இக்கோவிலுக்கு வந்து சமயவாதில் வென்று பொற்கிழி யறுத்தார் என்று கூறப்படுவதுண்டு.

திருமங்கையாழ்வார் இக்கோயிலைக் குறித்துக் 'கோழியும் கூடலும் கோயில் கொண்ட கோவலரே' எனப் பாடியுள்ளார். இராமனுஜரும் இக்கோயிலைக் கண்டு சென்றுள்ளார். மதுரைக்கு அருகில் உள்ள குந்தி நகரத்தில் (கொந்தகை) 1307இல் பிறந்தவர் திருவாய்மொழிப்பிள்ளை என்பவர். இஸ்லாமியர் படை எடுப்பின் போது இக்கோயிலைக் காத்தவர். அமைச்சர் பதவியைத் துறந்தும் இறைத்தொண்டு புரிந்தவர். இவரது சீடரே மணவாள மாமுனிகள். இவரும் இக்கோயிலைக் கண்டு வழிபட்டுப் பாடியுள்ளார். மணவாள மாமுனிகளின் திருவடித் தொண்டனான மாவலிவாணாதிராயன் ஒருவன் இக்கோயி லுக்கும், திருமாலிருஞ்சோலை, திருமோகூர் ஆகிய கோயில்களுக்கும் திருப்பணிகள் பல செய்துள்ளான். இக்கோயிலுள்ள இராமர், சீதை, இலக்குவன் ஆகிய செப்புத்திருமேனிகள் முற்காலப்பாண்டியர் காலத்தைச் சேர்ந்தவையாக (கி.பி. 10 ஆம் நூற்றாண்டு) இருப்பதைக் கொண்டும் இக்கோயில் தொன்மையானது என்பதை உறுதிப்படுத்தலாம்.

ஆனால் இக்கோயிலின் தற்போதைய கட்டுமானம் முற்றிலும் கி.பி. 15-16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவே உள்ளது. இக்கோயில் விமானம் எட்டு உறுப்புகளைக் கொண்டது என்பதால் வடமொழியில் இதனை அ டாங்க விமானம் எனக் கூறுவர். அதி டானம், பித்தி, பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்னும் இயல்பான ஆறு அங்கங்களுடன் இரண்டு மேல்தளங்களையும் சேர்த்து அட்டாங்க விமானம் என்பர். இவை அனைத்தும் திருமால் கோயில்களிலேயே காணப்படும். திருமாலின் இருந்த, நின்ற, கிடந்த கோலங்களைக் காட்டுவதற்காகவே இவை

அமைக்கப்படும். பாண்டிய நாட்டில் கூடல்அழகர், திருக்கோட்டியூர், மன்னார்கோயில் ஆகிய ஊர்களிலும், பல்லவநாட்டில் காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் உத்திரமேரூர் ஆகிய ஊர்களிலும் அட்டாங்க விமானக் கோயில்கள் அமைந்துள்ளன.

இக்கோயிலும் இஸ்லாமியர் படை எடுப்பின்போது அழிவுக்குட்பட்டிருக்கலாம். ஏனெனில் இன்று பழமையான கட்டுமானப் பகுதிகள் எவையும் காண முடியவில்லை. இன்றைய கட்டுமானங்கள் 16ஆம் நூற்றாண்டில் தோன்றியவையே. இங்குள்ள கல்வெட்டுகளும் இதையே உறுதிப்படுத்துகின்றன. இக்கோயிலின் திருச்சுற்றுச் சுவரில் உள்ளும் புறமும் சுமார் 50க்கும் மேற்பட்ட துண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. இவை யாவும் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. சோழவந்தான், தேனூர் பகுதிகளில் சிதைந்து கிடந்த சிவன் கோயில் கற்களைக் கொண்டுவந்து இங்குக் கட்டியுள்ளனர். இதில் பிற்காலப் பாண்டியர் மெய்க்கீர்த்திப் பகுதிகளும் சில அரசியல் அதிகாரிகளின் பெயர்களும் இடம்பெற்றுள்ளன.

கோயில் விமானத்தின் அதிட்டானப் பகுதியில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டுகள் விசயநகர மன்னர் சதாசிவராயர் (கி.பி. 1542-70) காலத்தவை. இவர் காலத்தில் தென்மண்டல அதிபதியாக இராமராசவிட்டல மகாதேவ ராயர் விளங்கினார். அவரின் கீழ் அதிகாரியாயிருந்த வசவணரின் மகன் திம்மப்பநாயக்கர் தனது தலைவர் இராமராசவிட்டலர்க்குப் புண்ணியமாக கூடலழகர் கோயில் வழிபாட்டுச் செலவுகளுக்கு மதுரைப் பகுதியில் சில கிராமங்களை விடுத்துள்ளார். இதன்படி பெருங்குடி, இரட்டைக்குளம், வண்ணானேந்தல், குமுழங்குளம், முதலிய ஊர்களும் அவனிநாரரயணபுரத்து உட்கிடையான சிந்தாமணி, மட்டப்பாறைக்கு அருகில் முள்ளிப்பள்ளம், திருப்புவனம் அருகில் பில்வாய்க்கரை, அல்லிகுளம், [illegible]குளம், பசுமண்குளம் ஆகியவை தானமாக அளிக்கப்பட்ட[illegible]

கூடலழகர் கோயில் அர்த்தமண்டபத்தினை திம்மப்ப நாயக்கர் காலத்தில் வாழ்ந்த கந்தாடைகோனமன் என்பவர் கட்டினார். கந்தாடை அண்ணனுக்குப் புண்ணியமாக கோனமன் இப்பணியை முடித்தான். கருவறை நிலைவாயிலின் திருப்பணியை இதே காலத்தில் நவமாணிக்கம் அலங்காரபட்டம் நிறைவேற்றினார். மகாமண்டபத்து நிலைவாயில் பணியை அண்டநாட்டுப் பெருமண நல்லூரில் இருந்த அழகர் தெய்வச் சிலைப் பெருமாள் என்பவர் செய்து முடித்தார். இவ்வூர் இன்று மதுரை திருப்புவனம் இடையில் அமைந்த மணலூரே ஆகும்.

கி.பி. 1740ல் ஆர்க்காட்டு நவாப் மற்றும் சந்தாசாகிப் ஆகியோரால் மதுரை கைப்பற்றப்பட்ட போது மீனாட்சி சுந்தரேஸ்வரரையும், கூடலழகரையும் வானரவீர மதுரை என்னும் மானாமதுரைக்கு பக்தர்கள் பாதுகாப்பாகக் கொண்டு சென்றனர். சேதுபதியின் பாதுகாப்புடன் இரண்டாண்டுகள் அங்கு வழிபாடு செய்யப்பட்டது. பின்னர் மராத்திய ஆளுநர் முராரிராவ், அப்பாச்சி நாயக்கர் தலைமையில் படை அனுப்பி சேதுபதியின் இசைவுடன் இறைவரை மதுரைக்குக் கொண்டு வந்து அமைத்து குடமுழுக்குச் செய்வித்தனர்.

இவ்வகையில் மீனாட்சி கோயிலுக்கு இணையான வரலாற்றுப் பெருமையும் இலக்கியச் சிறப்பும் கொண்ட கூடலழகர், பல ஏற்றத் தாழ்வுகளைச் சந்தித்த போதும் இன்றும் நிலைத்து நின்று அருள்பாலிக்கிறார்.

## திருமலை நாயக்கர் மகால்

மதுரை மாநகரின் சிறப்புகளுள் ஒன்று திருமலை நாயக்கர் மகால். மதுரை நாயக்கர் மரபின் ஏழாவது மன்னன் திருமலை நாயக்கர். கி.பி. 1623 முதல் 1659 வரை மதுரையை ஆண்டார். அவர் காலத்தில் திருச்சியிலிருந்த தலைநகரம் மதுரைக்கு மாற்றப்பட்டதால் மாபெரும் அரண்மனை ஒன்றை அவர் இங்குக் கட்ட விரும்பினார். இத்தாலியக் கட்டடக்கலை வல்லான் ஒருவனின் உதவியுடன்

ஏழு ஆண்டுகள் உழைத்து 1636இல் இவ்வரண்மனை கட்டி முடிக்கப்பட்டது எனக் கூறப்படுகிறது. முதலில் தற்போதுள்ளது போல நான்கு மடங்கு பெரியதாக இருந்தது என்பர். திருமலையின் தம்பி சொக்கநாத நாயக்கர் மீண்டும் தலைநகரைத் திருச்சிக்கு மாற்றினார். எனவே இவ்வரண்மனைப் பொலிவிழந்தது. சில பகுதிகளை இடித்துத் திருச்சிக்கு எடுத்துச் சென்றார் என்றும் கூறுவதுண்டு.

இவ்வரண்மனை சொர்க்கவிலாசம், ரங்க விலாசம் எனும் இருபெரும் பகுதிகளாக அமைந்திருந்தது. சொர்க்க விலாசம் என்பது தர்பார் மண்டபம், அமைச்சகம், அலுவலர் அறைகள் ஆகியவைகளைக் கொண்டதாகவும், ரங்க விலாசம் மற்ற குடியிருப்புப் பகுதிகளைக் கொண்டதாகவும் இருந்தது.

ஆண்டுதோறும் சித்திரைத் திருவிழாவின் எட்டாம் நாளில் திருமலை மன்னர் மீனாட்சி அம்மைக்குக் கோயிலில் முடி சூட்டு விழா நடத்தி அம்மனிடமிருந்து செங்கோல் பெற்று யானை மீது வைத்து வீதி உலாவாகக் கொண்டு வருவார். அரண்மனையில் சொர்க்க விலாசத்தில் அலங்காரித்த சிம்மாசனத்தில் செங்கோலைச் சார்த்தித் தான் கீழே அமர்வார். மறுநாள் பூசையுடன் செங்கோல் மீண்டும் கோயிலுக்குக் கொண்டு செல்லப்படும். அம்மையின் நேரடிப் பிரதிநிதியாகத்தான் மதுரையை ஆள்வதாக மன்னர் கருதினார். நவராத்திரி விழா ஒன்பது நாட்கள் இவ்வரண்மனையில் சிறப்பாக நடைபெற்றது.

தற்போது மக்கள் பார்வைக்கு எஞ்சியுள்ள பகுதியில் தர்பார் மண்டபமும் நாடகசாலையும் முக்கியமானவை. அரசகுடும்பத்தினர் தினமும் மாலை வேளைகளில் பலவித கலை நிகழ்ச்சிகளைக் கண்டுகளிக்கும் இடம் நாடகசாலை. அந்தப்புரம், ஆயுதசர்லை, வசந்தவாவி, மலர்வனம், சந்திரிகை மேடை, ஆகிய பகுதிகள் அழிந்துவிட்டன.

அரண்மனையின் வாயில் வடகிழக்கில் நவபத்கானா தெருவில் அமைந்திருந்தது. அரசு மரியாதையுடன் வரும்

விருந்தினர்கள் இவ்வாசல் வழியே 18வகை இசைக்கருவிகள் முழங்க பல்லக்குகளில் அழைத்து வரப்படுவர். அதற்கான பல்லக்கு மண்டபங்களும் வாயில் அருகிலேயே இருந்தன.

இவ்வரண்மனையைச் சுற்றிலும் 900 அடி நீளமும், 660 அடி அகலமும் 40 அடி உயரமும் உடைய பாரிமதிள் என்னும் சுற்றுச்சுவர் இருந்தது. கி.பி. 1837இல் பெருமழையின் காரணமாக இச்சுவர் இடிந்தது. 1868இல் சென்னை மாநிலத்தின் ஆளுநராக இருந்த நேப்பியர் பிரபுவின் முயற்சியால் இவ்வரண்மனை 5,13,000 ரூபாய் செலவில் பழுதுபார்க்கப்பட்டது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் படைகள் தங்குமிடமாகவும், காகித ஆலையாகவும் நெசவுப் பட்டறையாகவும் செயல்பட்டது. கி.பி. 1970 வரையில் இங்கு இராமநாதபுரம், மதுரை மாவட்ட நீதிமன்றங்கள் செயல்பட்டன. அதன்பிறகு தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை இதனை வரலாற்றுச் சின்னமாக அறிவித்துப் பராமரித்து வருகிறது.

அண்மையில் 1997இல் 53 லட்சம் ரூபாய் செலவிலும் 2004இல் ஒரு கோடி ரூபாய் செலவிலும் பராமரிக்கப் பட்டுள்ளது. பார்வையாளர்கள் தினமும் காலை 9.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை அனுமதிக்கப்படுகின்றனர். அனுமதிக் கட்டணமாக இந்தியர் பெரியவர்க்கு ரூ. 10ம், சிறியவர்க்கு ரூ. 5ம், வெளிநாட்டினர்க்கு முறையே ரூ. 50, ரூ 25ம், வசூலிக்கப்படுகின்றன. நாடகசாலையில் அகழ்வைப் பகம் ஒன்று செயல்பட்டு வருகிறது.

தினமும் மாலை நேரத்தில் தமிழகச் சுற்றுலாத் துறை யினரால் ஆங்கிலத்திலும் தமிழிலும் மதுரை வரலாற்றைப் பிரதிபலிக்கும் ஒலிஒளிக் காட்சி நடத்தப்படுகிறது. இதற்குக் கட்டணமாக முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு என ரூ. 10ம் ரூ 5ம் வசூலிக்கப்படுகின்றன.

# 14. மதுரை தெற்கு வட்டம்

**திருப்பரங்குன்றம்**

*மதுரை நகரின் தென்பகுதியில் விருதுநகர் செல்லும் சாலையில் எட்டு கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது திருப்பரங்குன்றம். முருகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றாக இது கருதப்படுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே இவ்வூர் வராற்றுச் சிறப்பு பெற்று விளங்குகிறது.*

*சமணத்துறவியர் வாழ்ந்த இயற்கையான குகைத் தளங்கள் திருப்பரங்குன்றம் மலையில் உள்ளன. அவர்கள் தங்கியிருந்தமைக்கு அடையாளமாகக் கற்படுக்கைகள் இங்குள்ளன. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ் - பிராமி எழுத்துக்களில் வெட்டப்பட்ட கல்வெட்டுகளும் இச்சமணர் குகைத்தளத்தில் காணப்படுகின்றன.*

1. அந்துவன் கொடுபிதவன்
2. எருக்காடூர் ஈழக்குடும்பிகன் போலாலயன் செய்த ஆய்சயன நெடுசாதன
3. மாரயது கயம்

*என்பவை தமிழ்க் கல்வெட்டுகளாகும். இக்கல்வெட்டு களில் ஒன்று கி.மு. 2-1ஆம் நூற்றாண்டையும் மற்றொன்று கி.பி. 1-2ம் நூற்றாண்டையும் சேர்ந்தவையாக இருக்கலாம் எனத் தொல்லியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். 'அந்துவன்' எனும் பெயர் சங்கப்புலவர்கள் சிலருக்கு இருந்துள்ளது. 'எருக்காடூர்' என்பதும் சங்க காலத்தில் இருந்த ஓர் ஊரின் பெயர். எனவே இக்கல்வெட்டுகள் சங்க காலக் கல்வெட்டுகளே என்பதில் ஐயமில்லை.*

*சங்க இலக்கியங்களான, அகநானூறு, கலித்தொகை, மதுரைக்காஞ்சி, பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய இலக்கியங்களில் திருப்பரங்குன்றம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. சம்பந்தர், சுந்தரர் இருவராலும் பாடப்பெற்றுள்ள பாடல்கள் தேவாரப்பதியங்களில் இவ்வூர் பற்றி இடம் பெறுகின்றது. திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகர் திருப்பரங்குன்றம் பற்றியும் பாடியுள்ளார். இது தவிர கல்லாடம், பெரியபுராணம், திருப்புகழ், கந்தபுராணம் போன்ற பிற்கால நூல்களிலும் திருப்பரங்குன்றம் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளது. திருப்பரங்கிரிப்புராணம் என்பது இத்தலத்தின் சிறப்பைக் கூறும் தலபுராணமாகும். இவ்வளவு இலக்கியச் சான்றுகள் திருப்பரங்குன்றத்தின் பெருமையைப் பறைசாற்றுகின்றன.*

## சில இலக்கிய குறிப்புகள்

ஒலிந்த பகன்றை விளைந்த கழனி
வன்கை வினைஞர் அரிபறையின் குரல்
தனிமழை பொழியுந்தன்பரங்குன்றிற்
கலிகொல் சும்மை யொலி கொளாயம் (மது. கா. 262 – 265)

ஒன்னாதார்க் கடந்தரூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்
(பாலைக்கலி – 27)

ஆராக்கனை காமங்குன்றத்து நின்னொடு
மாரியிறுத்த கடவுளைக் கண்டாயோ (மருதக்கலி)

வளர்பூங்கோங்க மாதவியோடு மல்லிகைக்,
குளிர்பூஞ்சாரல் வண்டறை சோலைப் பரங்குன்றம்
(சம்பந்தர்)

திங்களும் பாம்பும் நிகழ்கடை வைத்தோன் தேன்மொழி
பங்கினன் மேய நன்னகர் போலும் பரங்குன்றமே (சம்பந்தர்)

பரமர் திருப்பரங்குன்றில் சென்று பார்த்திபரோடு
புரமெரித்தார் கோயில் வலம் கொண்டு புகுந்து உள்ளிறைஞ்சி
(பெரியபுராணம்)

கறங்குகால் அருவிப் பரங்குன்றுடுத்த
. பொன்னகர்க்கடல் சென்னியம் பிறையோன் (கல்லாடம்)

மணிமேற்குமரன் திருவளர் குமரன்
பேரணி உடுத்த நெடுநகர்க்கடல் (கல்லாடம் செய – 81)

செந்திலங் கண்டிக் கதிர்வேலா
வெண்பரங்குன்றிற் பெருமாளே (திருப்புகழ்)

*இன்று மக்களால் பெரிதும் போற்றி வழிபடப்படும் முருகன் கோயில் மலையின் வடக்குப் பகுதியில் உள்ளது. இது ஒரு குடைவரைக்கோயிலினுள் உள்ளதாகும். இது கி.பி. எட்டாம் நூற்றாண்டில் முற்காலப் பாண்டியர்களால் எடுக்கப்பட்டது இக்குடைவரை. இதே காலத்தில் மலையின் தென்பகுதியிலும் ஒரு குடைவரைக் கோயில் எடுக்கப்பட்டுள்ளது. அது சமணர் கோயிலாக இருந்திருக்கலாம். உமையாண்டார் கோயில் என்று இன்று வழங்கப்படும் இக்கோயில் கி.பி. 13ம் நூற்றாண்டில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனால் திருத்தி சிவன் கோயிலாகக் கட்டப்பட்டுவிட்டது என்பர்.*

*முதலில் சொன்ன மலையின் வடபகுதியில் உள்ள கோயில் சிவபெருமானுக்காக குடைவிக்கப்பட்ட குடைவரைக் கோயிலாகும். இக்குடைவரைக் கோயிலில் கிழக்கு நோக்கிய வகையில் சிவனுக்கும் மேற்கு நோக்கி திருமாலுக்குமாகக் கருவறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இரண்டுக்கும் இடைப்பட்ட மண்டபத்தில் விநாயகர், துர்க்கை, முருகன், ஆகிய தெய்வங்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. சிவன் கோயிலாக இருந்த இக்கோயிலில் சிறுதெய்வமாக இருந்த முருகனுக்கு அதிக முக்கியத்துவம் ஏற்பட்டுள்ளது. அதன் காரணமாக முருகன் கோயில் என்றே இன்று பெயர் பெற்றுவிட்டது. கி.பி. 12 ஆம் நூற்றாண்டளவில் திருக்காமக் கோட்டம் என்னும் உமையம்மை கோயில் எடுக்கப்பட்டுள்ளது. கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு வரையிலும் சிவன் கோயிலாகவே பெருமை*

பெற்றிருந்த இது எக்காரணத்தாலோ மதுரை நாயக்கர் காலத்தில் முருகன் கோயில் என்றே நிலை பெற்றுவிட்டது.

இக்கோயில் கி.பி. 773 ஆம் ஆண்டில் பராந்தக நெடுஞ்சடைய வரகுணன் என்னும் பாண்டிய மன்னனின் படைத்தலைவன் (சாமந்தமன்) சாத்தன் கணபதி என்பவனால் திருத்துவிக்கப்பட்டது என்று இங்குள்ள வட்டெழுத்துக் கல்வெட்டு கூறுகிறது. அவனுடைய மனைவி நக்கன் கொற்றி என்பவள் துர்க்கைக்கும் ஜேஸ்டைக்கும் கோவில் எடுத்துள்ள செய்தியும் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. எனவே கி.பி. எட்டாம் நூற்றாண்டளவில் பாண்டியர் கலை மரபில் இக்குடைவரைக்கோயில் செய்விக்கப்பட்டது என்பது உறுதிப்படுகிறது.

எட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு 13 ஆம் நூற்றாண்டுவரை இக்கோயில் எவ்வித வரலாற்றுக் கல்வெட்டுகளும் காணப்பெறவில்லை. ஒருவேளை கோயில் திருப்பணிகளின்போது கல்வெட்டுகள் பல இடமாற்றம் பெற்றிருக்கலாம். கி.பி. 13ம் நூற்றாண்டில் பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இக்கோயில் பலவித வளர்ச்சியினைப் பெற்றுள்ளது.

நாயக்கர்கள் காலத்தில் இங்குப் பலமண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. மண்டபத் தூண்களில் பல தெய்வீகச் சிற்பங்களும், அரசன், அரசியர் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன. நாயக்கர் காலத்தில் கோபுரமும் கட்டப்பட்டுள்ளது.

மலையின் தென்புரத்தில் உள்ள குடைவரைக் கோயிலும் கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இன்று உமையாண்டார் கோயில் என அழைக்கப்படுகிறது. சமணர் கோயிலாக இது முதலில் இருந்திருக்கலாம். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் அவனது அரண்மனையில் தங்கியிருந்தபோது பிரசன்ன தேவர் என்பவரின் வேண்டுகோளின்படி இக்

கோயிலுக்கு கொடைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவன் காலக் கல்வெட்டில் இக்கோயிலின் பெயர் 'சுந்தரபாண்டிய ஈஸ்வரமுடையார் கோயில்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் அங்குள்ள பைரவர் முதலிய சில சிற்ப உருவங்கள் இக்கோயில் முன்பு சமணக் கோயிலாக இருந்தமையை உணர்த்தும் வகையில் உள்ளன.

வெள்ளையர் காலத்தில் அவர்கள் திருப்பரங்குன்றம் முருகன் கோயிலை மருத்துவமனையாகப் பயன்படுத்தி யுள்ளனர். அவர்களின் அத்துமீறல்களைக் கட்டுப்படுத்தவும் கோயிலுக்கு அவர்களால் ஏற்பட்ட சீர்கேடுகளைக் களையவும் கோயில் பணியாளர்களும் ஊர்ப்பிரமுகர் களும் திரண்டு போராடினர். இதில் 'வயிராவிக்குட்டி' என்பவன் கோயில் கோபுரத்தின் மீது ஏறிக் கீழே விழுந்து உயிர் துறந்து எதிர்ப்புத் தெரிவித்தான். அவனுக்காக ஊரார் இரத்தக்காணியாக நிலம் கொடுத்தனர்.

இவ்வகையில் சங்க காலம் முதலே சிறப்புப்பெற்ற திருப்பரங்குன்றம் கோயில் பாண்டியர்கள் மற்றும் நாயக்கர் களின் பெரும் கவனத்திற்குள்ளாகி பெருங்கோயிலாக உருப்பெற்றது. சமணரும், சைவரும் ஒரே சமயத்தில் கோயில்கள் எடுப்பித்து வழிபட்டுள்ளனர். சிவன் கோயிலாகப் பரிணமித்த இக்குடைவரை பின்னர் முருகன் கோயிலாகப் பெருமை பெற்று இன்றும் மக்களால் பெரிதும் விரும்பி வழிபடத்தக்கத் தலமாக விளங்குகிறது. விழவுமலி மூதூர் என்பது இன்றைய திருப்பரங் குன்றத்திற்கு முற்றிலும் பொருந்தும்.

**மாடக்குளம்**

இன்றைய மதுரை மாநகரின் மேற்கில் 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது மாடக்குளம் கிராமம். இங்குள்ள பெரிய கண்மாயின் பெயரே மாடக்குளம் என்பது. ஊருக்கும் அப்பெயரே வழங்கலாயிற்று. பல

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் மாடக்குளம் குறிக்கப்பட்டுள்ளது.

மதுரை நகரைக் குறிக்கும் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் மதுரோதய வளநாட்டில் மாடக்குளக்கீழ் மதுரை என வழங்கப்படுகிறது. மாடக்குளக்கீழ் மதுரை, மாடக்குளக்கீழ் திருப்பரங்குன்றம், மாடக்குளக்கீழ் அரியூர், மாடக்குளக்கீழ் குலசேகரபுரம், மாடக்குளக்கீழ் கொடிமங்கலம் என்று பல கிராமங்கள் குறிப்பிடப்படு கின்றன. இதன் மூலம் 'குளக்கீழ்' என்பது ஒரு நாட்டுப்பிரிவு வகையைச் சேர்ந்தது எனக் கருதலாம்.

இம்மாடக்குளம் மதுரை நகரின் நீர்ப்பாசன ஆதாரங்களில் முக்கியமான ஆதாரமாகத் திகழ்கிறது. மாடக்குளம் உடைந்தால் மதுரை நகரழியும் என்று ஒரு பழமொழியும் நிலவுகிறது. மாடக்குளக்கீழ் அமைந்துள்ள மதுரை நகரின் பிற்காலப் பாண்டியர் கால அரண்மனை அமைந்திருந்தது.

மாடக்குளத்தை அடுத்து கிழக்கில் பழங்காநத்தம் என்னும் ஒரு பகுதி உள்ளது. இதன் பெயரே இது பழங்காலத்திலேயே மக்களின் குடியிருப்புப்பகுதியாகத் திகழ்ந்தது என்பதைக் குறிக்கும். பழங்கால நத்தம் என்பதே பழங்காநத்தம் என மருவியுள்ளது எனலாம்.

## கோவலன் பொட்டல்

பழங்கா நத்தத்தில் மிக அருகில் கோவலன் பொட்டல் என்னும் ஒருபகுதி அமைந்துள்ளது. சிலப்பதிகார நாயகன் கோவலன் இந்த இடத்தில் வெட்டப்பட்டதால் இப்பெயர் இவ்விடத்திற்கு வழங்குவதாகச் செவி வழிச் செய்தி நிலவுகிறது.

இந்த இடத்தில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை 1981இல் அகழாய்வு நடத்தியது. அவ்வாய்வின் பயனாகப் பெருங்கற்கால முதுமக்கள் தாழிகள் சில வெளிக்

கொணரப்பட்டன. கருப்பு சிவப்பு வண்ண மட்பாண்டங்களும், புதிய கற்காலக் கைக்கோடாரி ஒன்றும், சில செப்புக்காசுகளும் இவ்வாய்வில் கிடைத்தன. எனவே சுமார் 2000 ஆண்டுகட்கு முன்பாகவே மக்கள் இப்பகுதியில் வாழ்ந்தனர். அன்றைய மதுரையின் ஒரு பகுதியே இது என்பது உறுதிப்படுகிறது.

## கீழக்குயில்குடி

மதுரையை அடுத்த நாகமலைப் புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள சிற்றூர் கீழக்குயில்குடி. இவ்வூரில் அமைந்துள்ள மலைக்குச் 'சமண மலை' என்றே பெயர் வழங்குகிறது. சமணர்கள் வாழ்ந்த சமணர்க்குரிய மலையாக விளங்கியமையால் இது சமண மலை என்று இப்பகுதி மக்களால் அழைக்கப்படுகின்றது. அதற்கு முன்பு எண்பெருங்குன்றங்களில் ஒன்றான 'திருவுருவகம்' என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளது. இங்கிருந்த சமணப்பள்ளி 'மாதேவிப் பெரும்பள்ளி' என்ற பெயரில் விளங்கியுள்ளது. இம்மலையைச் சார்ந்த பழமையான ஊராகக் குயில்குடி இருந்தது. இதுவே தற்போது கீழக்குயில்குடி, மேலக்குயில் குடி என்று இரண்டு ஊர்களாக இருந்து வருகிறது. கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சமணமலைக் கல்வெட்டில் இதன் பெயர் "குயிற்குடியான அமிர்தபராக்கிரம நல்லூர்" என்று குறிப்பிடப்படுகிறது. அமிர்த பராக்கிரமன் என்ற பெயர் முற்காலப் பாண்டிய மன்னர்க்குரிய பெயராகும்.

குயிற்குடியும் அதனைச் சார்ந்த பகுதிகளும் 'நாட்டாற்றுபுறம்' என்ற நாட்டுப் பிரிவில் இருந்துள்ளன. மாடக்குளத்தின் பாசனக்கால் போக்கில் இவ்வூர் இருந்தமையால் மாடக்குளக்கீழ் நாட்டாற்றுப்புறத்துக் குயில்குடி எனப்பட்டது. சமணமலை முதல் குன்றின் உச்சியிலுள்ள கட்டடக் கோயிலில் கண்டறியப்பட்ட கல்வெட்டில் இம்மலைக்குரிய பெயர் 'திருவுருவகம்' என்றும் இம்மலையில் இருந்த பள்ளியின் பெயர் மாதேவிப்பெரும்பள்ளி என்றும் அறிய முடிகிறது. சமணத்

திருவுருவங்களின் இருப்பிடமாய் (திரு + உரு + அகம்) இம்மலை திகழ்ந்தமையால் திருவுருவகம் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். இம்மலையில் பராந்தக வீரநாராயணன் (கி.பி. 860-905) காலத்தில் தோற்று விக்கப்பட்ட இப்பள்ளி அவனது மனைவியான வானவன் மாதேவியின் பெயரைக் கொண்டு விளங்கி உள்ளது.

சங்க காலத்திற்குப் பிறகு திகம்பரப் பிரிவைச் சார்ந்த சமணர்கள் இக்குகைத் தளங்களில் வாழ்ந்தனர். கி.பி. 7 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் இப்பள்ளி பெருவளர்ச்சி அடைந்தது. கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் 13 ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் இப்பள்ளி வெறும் துறவிகளின் உறைவிடமாக மட்டுமல்லாமல் திருவுருவங் களைச் செய்வித்து வழிபட்ட சமணர்களின் வழிபாட்டுத் தலமாகவும் மாறியது. இதனால் இல்லறத்தினைப் பின்பற்றிய சாவகர்கள் இம்மலைக்கு அதிக அளவில் வந்து சென்றனர். இக்குன்றங்களில் இருந்த துறவியரும் அவர்களது மாணவர்களும், இம்மலைக்கு வந்து சென்ற இல்லறத் தாரும் பல தீர்த்தங்கரர் திருமேனிகளையும் இயக்கியர் உருவங்களையும் புடைப்புச் சிற்பங்களாக இங்குள்ள பாறைகளில் செய்வித்து உருவ வழிபாட்டை வளர்த்தனர். இதனால் இம்மலையில் அழகிய பல சமணத் திருவுருங்களைக் காணமுடிகின்றது.

பராந்தக வீரநாராயணன் முதலிய பாண்டிய அரசரின் ஆதரவில் கீழக்குயில்குடியைச் சார்ந்த சமண மலைக் குன்றின் உச்சியில் கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் கல்லாலான பெரிய தீர்த்தங்கரர் கோயில் ஒன்று எடுக்கப்பட்டு இருக்கிறது. அதன் பின்னர் இக்கோயிலும், அதனைச் சார்ந்த சமணமலைப்பள்ளியும், 'மாதேவிப் பெரும்பள்ளி' என்று அழைக்கப்பட்டன. இப்பள்ளியின் வரலாற்றில் ஏற்பட்ட முக்கிய நிகழ்வு இதுவாகும்.

மாதேவிப்பெரும்பள்ளி கி.பி. 9 ஆம் நூற்றாண்டி லிருந்து தொடர்ந்து மூன்று நூற்றாண்டுகள் சமணத்

துறவிகளும் அவர்களது மாணவர்களும் நிறைந்த சமணக் கல்லூரியாகவும் இருந்துள்ளது. முற்காலப் பாண்டியர் காலத்தில் இப்பள்ளியின் புகழ் தென்னிந்தியா முழுவதும் பரவியிருந்தது. இதனால் திகம்பர சமணத்தின் மூல சங்கமாக விளங்கிய கர்நாடகத்தின் சிரவணப் பெள்கோளா விலிருந்து துறவிகள் பலர் இப்பள்ளிக்கு வந்துள்ளனர். மடம் ஒன்றையும் தோற்றுவித்து இருக்கின்றனர்.

சமண முனிவர்களின் வாழ்விடமாகவும் சமணர்களின் வழிபாட்டுத் தலமாகவும் சமணக் கல்லூரியாகவும் விளங்கிய சமணமலைப் பள்ளிக்கு அரசர்கள் மட்டுமின்றி இப்பகுதியில் இருந்த நாட்டாற்றுப்புறத்து நாட்டவையினரும் குயில்குடி ஊரவையினரும் ஆதரவளித்துப் போற்றியுள்ளனர். முற்காலப் பாண்டியர் காலத்தில் பெருஞ்செல்வாக்குடன் திகழ்ந்த வேளாண் சமூக நிலவுடைமையாளர்களான நாட்டாரும் ஊராரும் இப்பள்ளிக்கு ஆதரவளித்துக் காத்துள்ளது இப்பள்ளியின் நிலையான வளர்ச்சிக்கு வழிகோலியது. பிற சமயத்தவரிடமிருந்து சமணத்தினைக் காத்தது.

## செட்டிப்பொடவு

சமண மலையின் தென்மேற்குப் பக்கத்தில் கீழக்குயில்குடியின் அருகில் செட்டிப்பொடவு என்னும் குகை இருக்கிறது. இந்தக் குகையின் இடதுபுறத்தில் ஒரு தீர்த்தங்கரரின் உருவம் பாறையில் அமைக்கப்பட்டி ருக்கிறது. இவ்வுருவம் பார்ப்பதற்கு ஒரு செட்டியார் போலத் தெரிவதால் இவ்விடத்திற்குச் செட்டிப்புடவு எனப் பெயர் வழங்கப்படுகிறது. இந்த உருவத்தின் கீழ் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. இந்த எழுத்து வடிவம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. குகையின் உள்ளே அரை வட்டமாகக் குழிந்த கூரை அமைந்துள்ள பாறையில் தனித்தனியாக ஐந்து உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. முதல் உருவம் நான்கு கைகளையுடைய இயக்கி உருவம். சிங்கத்தின் மேல்

அமர்ந்து ஒரு கையில் வில்லையும் மற்றொரு கையில் அம்பையும் ஏனைய கைகளில் வேறு ஆயுதங்களையும் பிடித்திருக்கிறது. இந்த இயக்கிக்கு எதிரில் யானையின் மேல் அமர்ந்துள்ள ஆண் உருவம் கையில் வாளையும் கேடயத்தையும் பிடித்திருக்கிறது. இது சாஸ்தா உருவம் போலும். இதையடுத்துத் தனித்தனியே மூன்று தீர்த்தங்கரர்களின் உருவங்கள் முக்குடைகளுடன் செதுக்கப்பட்டுள்ளன. இந்தத் திருமேனிகளின் வரிசையில் பத்மாவதி என்னும் இயக்கியின் உருவம் வலது காலைத் தொங்கவிட்டு இடதுகாலை மடக்கிச் சுகாசனத்தில் அமர்ந்திருப்பது போல் செதுக்கப்பட்டுள்ளது. இந்த ஐந்து சிற்பங்களில் நடுவில் உள்ள மூன்று தீர்த்தங்கரரின் உருவங்களுக்குக் கீழே பின்வரும் நான்கு வட்டெழுத்துச் சாசனங்கள் எழுதப்பட்டுள்ளன.

1. .... வெண்புணாட்டுக்குறண்டி திருக்காட்டாம் பள்ளி கனகனந்திப்படாரர் அபினந்தனபடாரர் அவர் மாணாக்கர் அரிமண்டலப்படாரர் அபினந்தனப் படாரர் செய்வித்த திருமேனி.

2. ஸ்வஸ்திஸ்ரீ இப்பள்ளியுடைய குணசேனதேவர் சட்டன் தெய்வ பலதேவர் செய்விச்ச திருமேனி

3. ஸ்வஸ்திஸ்ரீ வெண்புணாட்டுக் குறண்டித் திருக்காட்டாம் பள்ளிக் குணசேனதேவர் மாணாக்கர் வர்தமானப் பண்டிதர் மாணாக்கர் குணசேனப் பெரியடிகள் செய்வித்த திருமேனி.

4. ஸ்வஸ்திஸ்ரீ இப்பள்ளி ஆள்கின்ற குணசேனதேவர் சட்டன் அந்தலையான் களக்குடி தன்னைச் சார்த்தி செய்வித்த திருமேனி.

மேற்கண்ட கல்வெட்டுகளின் மூலம் நந்திகணம், சேனகணம் ஆகிய இருவகை சமணத் துறவியர் இங்கு வாழ்ந்தனர் என்பது தெரிய வருகிறது. குறண்டி திருக்காட்டாம்பள்ளி என்ற ஒரு சமணப்பள்ளி இன்றைய அருப்புக்கோட்டை சாலையில் ஆவியூருக்கு அருகில்

அமைந்திருந்தது. அப்பள்ளியோடு சமணமலைப் பள்ளிக்கு நெருக்கமானத் தொடர்பு இருந்தது என்பது பெறப்படுகிறது. ஆசிரியர்களும், மாணாக்கர்களும் இங்குத் தங்கி மாணவர்கள் சமயக் கல்வி பெற்றிருக்கின்றனர்.

## முத்துப்பட்டி

முத்துப்பட்டி என்பது கீழக்குயில்குடிக்கு ஊருக்கு மேற்காக அமைந்துள்ள ஒரு சிற்றூர். இவ்வூருக்கு 'கரடிப்பட்டி' என்ற மற்றொரு பெயரும் இங்குள்ள மலைக்கு பெருமாள் மலை என்ற பெயரும் உண்டு. முற்காலப் பாண்டியர் காலத்தில் சமண சமயத்தில் உருவ வழிபாடு வளர்ந்த நிலையில் இக்குகைத் தளத்தில் திருமேனிகள் செய்து வழிபடப்பட்டுள்ளன. குகைத் தளத்துக் கற்படுக்கைப் பகுதியில் பீடத்தின் மீது தீர்த்தங்கரர் சிற்பம் ஒன்று தனித்த நிலையில் செய்து வைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். மூன்று சிம்மங்கள் சுமந்த இணையரி மேடையில் அர்த்தபரியங்கா சனத்தில் அமர்ந்த நிலையில் தீர்த்தங்கரர் காட்சியளிக்கின்றார். அவரது பின்புறம் பெரிய திண்டும் மகரவாய்களும் காணப்படுகின்றன. நீள்செவியுடைய பொலிவான உடலமைப்புடன் விளங்கும் இவரது இருபுறமிருந்து பக்கத்திற்கு ஒருவராக இரு இயக்கர்கள் கவரி வீசுகின்றனர். தலையினைச் சுற்றி சுவாலையுடன் கூடிய ஒளிவட்டம் திகழ்கிறது. தலைக்கு மேலே அசோகமரத்தின் சுருள் சுருளான கிளைகள் விரிந்துள்ளன. சிறிய முக்குடை தலைக்கு மேலிருந்து தீர்த்தங்கரர்க்கு நிழல் தருகின்றது. தனித்த நிலையில் அமைதி தவழும் எளிய தோற்றத்துடன் செய்விக்கப்பட்ட இத்தீர்த்தங்கரர் திருமேனி பாண்டிய நாட்டில் உள்ள கலைச் சிறப்பு வாய்ந்த தீர்த்தங்கரர் சிற்பங்களில் ஒன்றெனக் கூறலாம்.

குகைத் தளத்தின் வெளிப்புறத்தில் தென்திசை நோக்கிப் பாறையில் புடைப்புச் சிற்பமாக அமர்ந்த நிலையில் இரண்டு தீர்த்தங்கரர் உருவங்கள் காட்சியளிக்

கின்றன. அசோக மரத்தின் கிளைகளுக்குக் கீழே முக்குடை நிழலில் இயக்கர்கள் இருவர் கவரிவீச அர்த்த பரியங்காசனத்தில் அமர்ந்த நிலையில் தீர்த்தங்கரர்கள் திகழ்கின்றனர். மகரவாய், இணையரிகளுடன் மூன்று சிம்மங்கள் சுமந்த அரியாசனத்தில் இத்தீர்த்தங்கரர்கள் அமர்ந்துள்ளனர். இத்தீர்த்தங்கரர் சிற்பங்கள் கி.பி. 9ஆம் நூற்றாண்டின் இறுதியில் செய்விக்கப்பட்டதை இதனடியி லுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகளைக் கொண்டு அறியலாம்.

அடுத்தடுத்துள்ள இரண்டு மாடங்களில் தனித்தனியாக செய்விக்கப்பட்ட இத்தீர்த்தங்கரர் உருவங்களைச் செய்வித்தோர் பற்றி அவற்றின் அடியிலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவற்றின் மேல்புறமுள்ள தீர்த்தங்கரர் உருவத்தினைப் 'பராந்தக பருவதமாயின ஸ்ரீவல்லவப் பெரும்பள்ளிக் குறண்டி அ டோபவாசி படாரரின் மாணாக்கர் மகாணந்திப் பெரியார்' என்பவர் நாட்டாற்றுப்புறத்து நாட்டாரின் பெயரால் செய்வித்துள்ளார்.

இவ்வுருவத்தின் கீழ்ப்புறமுள்ள மாடத்திலுள்ள தீர்த்தங்கரர் சிற்பத்தினை நாட்டாற்றுப்புறத்து அமிர்த பராக்கிரம நல்லூராயின குயிற்குடி ஊராரின் பெயரால் கனகவீரப் பெரியடிகள் செய்வித்துள்ளார். இவர் குணசேனதேவரின் மாணாக்கர் ஆவார். குணசேனதேவர் முதல் மாடத்தில் இருந்த சிற்பத்தினைச் செய்வித்த மகாணந்திப் பெரியாரின் ஆசிரியர் குறண்டி அ டோப வாசிப் படாரரின் மாணாக்கர் ஆவார். இதற்குக் காவலாக 'பள்ளிச்சிவிகையார்' இருந்துள்ளனர்.

### துவரிமான்

மதுரைக்குச் சற்று மேற்கில் வைகைத் தென்கரையில் இவ்வூர் உள்ளது துவரிமானுக்கு அருகில் வைகையாற்றுக்

கரையோரங்களிலும், படுகைகளிலும் நுண்கற்கருவிகள் பெருமளவில் கிடைக்கின்றன. குவார்ட்ஸ், அகேட், ஜாஸ்பர், செர்ட் வகைக் கற்களைக் கொண்டு இக்கருவிகள் செய்யப்பட்டுள்ளன. ஒரு முனை, இரு முனை கத்திகள், வெட்டுக் கருவிகள், சுரண்டிகள், பிறைவடிவக் கருவிகள், துளையிடும் கருவிகள் ஆகியவை மேற்பரப்பு ஆய்விலேயே கிடைக்கின்றன. இக்கருவிகள் நேர்த்தியாகத் தயாரிக்கப் பட்டுள்ளன. இக்கருவிகளைச் செய்வதற்கு வேண்டிய மூலக் கற்களும் இங்குக் கிடைப்பதால் இங்கு ஒரு தொழிற்கூடமே செயல்பட்டு இருக்கலாம். இவற்றின் காலம் ஆறாயிரம் ஆண்டுகட்கும் மேலானது எனலாம். இதே பகுதியில் புதிய கற்காலக் கற்கோடாரிகளும் தமிழக அரசு தொல்லியல் துறையினரால் சேகரிக்கப்பட்டுள்ளது. கி.பி. 1887இல் பார்டல்ஸ் என்பவரும் அலெக்ஸாண்டர்ரே என்பவரும் துவரிமானில் அகழாய்வு மேற்கொண்டனர். அதில் முதுமக்கள் தாழிகளும் அதனுள் எலும்புகளும், வளவளப்பான கருப்பு சிவப்புப் பானை ஓடுகளும் கிடைத்துள்ளன.

துவரிமானின் வைகையாற்றுப் படுகையில் முத்திரை குத்தப்பட்ட வெள்ளிக் காசு ஒன்று சேகரிக்கப்பட்டுள்ளது. சதுர வடிவமான சிறிய காசில் முன்புறம் இரு ஆடவரும் ஒரு பெண்ணும் காணப்படுகின்றனர். காசின் பின்புறம் எவ்வித உருவமும் இல்லை. இக்காசு சங்க காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. இவ்வகையில் துவரிமான், மதுரை மாவட்ட வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெறும் ஊராக விளங்குகிறது.

### கீழடி

மதுரை தெற்கு வட்டத்தில் சிலைமானுக்கு அருகில் அமைந்துள்ள சிற்றூர் கீழடி என்பது. இவ்வூரின் பழைய பெயர் குந்திதேவிச் சதுர்வேதி மங்கலம் என்பதாகும்.

கொந்தகை என்றும் இப்போது பெயர் பெற்றுள்ளது. இங்குள்ள சிவன் கோயில் அர்ஜுன ஈஸ்வரம் எனப்படுகிறது. ஆனால் பிற்பாண்டியர் கல்வெட்டுகளில் கோவிலின் பெயர் முடிவழங்கு பாண்டிய ஈஸ்வரம் எனக் குறிப்பிடப்படுகிறது. சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியனின் விருதுப் பெயரான இப்பெயரில் இக்கோயில் வழங்கி வந்துள்ளது. மதுரோதயவள நாடு என்பது மதுரையின் ஒரு பெயர். அதனில் வேலூர்க்குளக்கீழ் என்னும் நாட்டுப் பிரிவுக்குள் அடங்கிய ஒரு பிரதமதேய ஊராக இன்றைய கீழடி (குந்திதேவிச் சதுர்வேதி மங்கலம்) திகழ்ந்துள்ளது. மகாபாரதக் கதையோடு ஒருவகைத் தொடர்பு இவ்வூருக்குக் கற்பிக்கப்பட்டது காரணமாக குந்திதேவி, அர்ஜுன ஈஸ்வரம் என்ற பெயர்கள் ஏற்பட்டிருக்கலாம்.

மலையாள நாட்டின் கண்ணனூர் பகுதியிலிருந்து இங்கு வந்த கூத்தன் தென்னாடன் திரிபுவனசிங்க தேவனுக்கு இவ்வூர்ச் சபையார் நில விற்பனை செய்துள்ளனர் என்பதைக் குலசேகர பாண்டியன் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. தியாகஞ்சிரியப் பேராறு என்னும் ஓர் ஆற்றை அண்ட நாட்டுத் துருமூர் என்னும் ஊரைச் சேர்ந்த அரயன் சூரியதேவன் ஆன தேவேந்திர வல்லவன் விராடராயன் வெட்டிய செய்தியும் அறியப்படுகிறது.

## அனுப்பானடி

மதுரைக்குத் தென் கிழக்கில் மதுரைக்கு மிக அருகில் அமைந்துள்ள சிற்றூர். இன்று மதுரையுடன் இணைந்த ஒரு பகுதியாகவே மாறிவிட்டது. இவ்வூரில் 1887 இல் அலெக்சாந்தர்ரே என்பவர் அகழாய்வு மேற்கொண்டார். ஈமத் தாழிகளையும், ஈமப் பேழைகளையும் இவர் கண்டறிந்தார். அடுத்து கே.எஸ். ஸ்ரீகண்டன் என்பவர் தனது ஆய்வின் மூலம் மூன்று அடி உயரமுள்ள பல ஜாடிகளைக் கண்டறிந்தார். பெருங் கற்காலத்தைச் சேர்ந்த

முதுமக்கள் தாழிகளும் கருப்பு சிவப்பு மட்கலங்களும் மிகுந்த அளவில் கிடைப்பதால் இப்பகுதி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பாகவே மக்கள் வாழிடமாக இருந்தது என்பது உறுதிப்படுகிறது.

# 15. மதுரை வடக்குவட்டம்

## ஆனைமலை

மதுரையிலிருந்து மேலூர் செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவில் ஒத்தைக்கடை என்னும் ஊருக்கு அருகில் யானை ஒன்று படுத்திருப்பது போன்ற மலை ஒன்று உள்ளது. இதன் உருவ அமைதியைக் கொண்டே இதனை யானை மலை என்று அழைப்பர். மண்தோன்றிய காலந்தொட்டு இம்மலை நிலை பெற்றிருந்தாலும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலான தொடர்ந்த நெடிய வரலாற்றுக்குரியது இம்மலை.

மலையின் மேல் முகட்டில் ஓர் இயற்கையான குகைத் தளம் உள்ளது. அதனைச் சமண சமயத் துறவியர் தங்குவதற்கு ஏற்ப வடிவமைத்து கற்படுக்கைகள் வெட்டியுள்ளனர். குகையின் நெற்றியில் மழைத் தண்ணீரை வெளியேற்றுவதற்குப் புருவம் வெட்டப்பட்டுள்ளது. அதன் கீழாக கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் பிராமி கல்வெட்டு ஒன்றும் வெட்டப்பட்டுள்ளது.

இவகுன்றதூருறையுள் பா தந்தான் ஏரி அரிதன்
அத்துவாயி அரட்ட காயிபன்

என்பது இக்கல்வெட்டுப்பாடம் ஆகும். இவம் என்பது பிராகிருதத்திலும் சமஸ்கிருதத்திலும் யானையைக் குறிக்க வழங்கும் சொல். எனவே கி.பி. முதல் நூற்றாண்டிலேயே இம்மலை இவகுன்றம் (யானைமலை) என்றே வழங்கப்பட்டு உள்ளது. பின்னர் ஞானசம்பந்தர் தன் தேவாரப் பாடலில் இவம் (யானைமலை) என்று குறிப்பிடுகிறார். இங்குள்ள

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டு இவ்வூரை நரசிங்கமங்கலம் எனச் சுட்டுகிறது. இன்றும் இம்மலையுள்ள ஊர் நரசிங்கம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

இம்மலையில் நரசிங்கப் பெருமாள் கோயில், லாடன் கோயில் (முருகன் கோயில்) என்று இரண்டு குடைவரைக் கோயில்கள் வெட்டப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டுக் குடவரைக் கோயில் வரலாற்றில் சிறப்பிடம் பெறத்தக்க கோயில்கள் இவை. நரசிங்கப் பெருமாள் குடைவரைக் கோயில் ஒரு சிறிய கருவறையும் முன் மண்டபமும் மட்டும் கொண்டுள்ளது. பிற்பாண்டியர், விசயநகர அரசர் காலத்தில் சில மண்டபங்கள் கட்டப்பட்டு கோயில் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. இக்கோயிலின் கருவறை வெளிச் சுவற்றில் கோயில் யாரால் எடுக்கப்பட்டது என்பதை விளக்கும் கல்வெட்டுகள் வடமொழியிலும் தமிழிலும் உள்ளன. வடமொழிக் கல்வெட்டு கிரந்த எழுத்திலும் தமிழ்க் கல்வெட்டு வட்டெழுத்திலும் அமைந்துள்ளன. வடமொழிக் கல்வெட்டில் கலியுக ஆண்டு 3871 குறிக்கப்பட்டுள்ளது. இதற்குச் சரியான கிறித்தவ ஆண்டு கி.பி. 770 ஆகும். தமிழகத்தில் ஆண்டுக் குறிப்புடன் எழுதப்பட்டுள்ள முதல் கல்வெட்டு இதுவே எனலாம். வட்டெழுத்துக் கல்வெட்டு பின்வருமாறு:

1. கோமாறஞ் சடையற்கு உ
2. த்தரமந்திரி களக்குடி வை
3. த்யன் மூவேந்த மங்கலப்
4. பேரரையன் ஆகிய மாறங்
5. காரி இக்கற்றளி செய்து
6. நீர்த்தெளியாதேய் சுவர்க்காரோ
7. ஹணம் செய்தபின்னை அவ
8. னுக்கு அனுஜன் உத்திர
9. மந்த்ர பதமெய்தின பாண்டி

10. மங்கல விசை அரையன்
11. ஆகிய மாறன்னெஇ
12. னன் முகமண்டபஞ் செ
13. ய்து நீர்த்தளித்தான்

*இதன் மூலம் மாறஞ்சடையன் பராந்தக நெடுஞ்சடைய வரகுணன் (கி.பி. 765 - 815) காலத்தில் அவனது அமைச்சன் மாறங்காரியால் இக்கோயில் பணி தொடங்கப்பட்டது. என்பதும் பணி முடியும் முன்னமே அவன் இறந்துபட்டதால் அவனது இளைய சகோதரன் அமைச்சனாகி இக்கோயிற் பணியை முடித்து குடமுழுக்குச் செய்வித்தான் என்றும் அறிகிறோம். பாண்டியர்களுக்குப் பின் மதுரையை வெற்றி கண்ட முதலாம் பராந்தக சோழன் இப்பகுதியில் நிலைப்படை ஒன்றை நீண்ட காலம் நிறுத்தி வைத்திருந்தான். அவனது 33ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்த (கி.பி. 940) தமிழ்-வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று நரசிங்கப் பெருமாள் கோயிலின் முகப்புப் பாறையில் வெட்டப்பட்டுள்ளது. இதில் சோழன் பராந்தகனின் அதிகாரி அருள்நிதிகலியன் என்பவன் அவன் பெயரால் கலியனேரி என்று ஓர் ஏரி வெட்டிக் கோயில் திருவமுதுக்கும் பிராமணர் உண்ணவும் காசுகள் தானம் அளித்தான் என்ற செய்தி கூறப்படுகிறது. இவ்வூர் நரசிங்கமங்கலம் என்றும் இது கீழ் இரணிய முட்டத்துள் அடங்கிய ஒரு பிரமதேயம் என்றும் கூறப்பட்டுள்ளது. இவ்வூர்ச் சபையாரும் அருள்நிதிகலியன் என்னும் அதிகாரியும் இணைந்து இத்தானத்தை நடத்தியுள்ளனர் என்பதும் தெரிகிறது.*

*முற் சோழர் காலத்திற்குப் பின் வந்த பிற்பாண்டியர் களும் நாயக்க மன்னர்களும் இக்கோயிலை விரிவுபடுத்திக் கட்டியுள்ளனர். இங்குள்ள பல துண்டுக் கல்வெட்டுகள் அவர்கள் காலக் கோயில் பணிகளைத் தெரிவிப்பனவாக அமைந்துள்ளன.*

## லாடன் கோயில்

*நரசிங்கப் பெருமாள் கோயிலுக்கு அருகிலேயே மற்றொரு குடைவரைக்கோயில் முற்பாண்டியர் கலைப் பாணியில் வெட்டப்பட்டுள்ளது. முருகனுக்கென அமைக்கப்பட்டுள்ள இக்கோயில் இன்று இப்பகுதி மக்களால் லாடன் கோயில் என வழங்கப்படுகிறது. ஒரு சிறிய கருவறையும், முன்மண்டபமும் உடைய எழில்வாய்ந்த குடைவரைக் கோயில் இது. கருவறையில் முருகனும் தேவசேனையும் ஒரு பீடத்தின் மீது புடைப்புச்சிற்பமாக அமர்ந்திருப்பது போல வடிக்கப்பட்டுள்ளனர். கண்ணி மாலையும் சன்னவீரமும் இவ்வுருவை முருகன் என அடையாளம் காட்டுகின்றன. இளமை பொங்கும் இணையாக இத்தெய்வ உருவங்கள் வடிக்கப்பட்டுள்ளன.*

*முன்மண்டபத்தில் சேவலும், மயிலும் தனித்தனியே அரைத்தூண்களின் மேல் அமர்ந்திருப்பது போலவும், அரசன், முனிவர் உருவங்களும் இடம் பெற்றுள்ளன. கூரையைக் குள்ள பூதகணங்கள் தாங்குவதாக வடிவமைக்கப் பட்டுள்ளது. கருவறைச் சுவர் அறைத்தூணில் சேவல் காட்டப்பட்டுள்ளது. இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் முன்மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. தூண்களில் சதுரம், எண்பட்டை ஆகிய அமைப்புகளும் சதுரப்பகுதியில் நன்கு விரிந்த தாமரை மலர் இதழ்களாலும் சீராகச் செதுக்கப்பட்டுள்ளன. தரங்கபோதிகை வடிவில் போதிகைகள் அமைந்துள்ளன. களிற்றுமுகப்படி இரண்டு புறமுமாக ஏறிச்செல்லும் வகையில் அமைக்கப் பட்டுள்ளது. முன்சுவற்றில் ஒரு தெளிவில்லாத வட்டெழுத்துக் கல்வெட்டு காணப்படுகிறது. அதில் 'புல்லாரி வட்டக்குறிச்சி நம்பிரான் பட்ட சோமாஜி பரிவிராஜகர் புதுக்கு' என எழுதப்பட்டுள்ளது. இதன் எழுத்தமைதி கொண்டு இக்கல்வெட்டு கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தைச் சேர்ந்தது என்பர். ஏற்கனவே தொடங்கப்பட்ட ஒரு பணியை வட்டக்குறிச்சி நம்பிரான் நிறைவு செய்துள்ளார் எனக் கொள்ளலாம்.*

இக்கோயில் தற்போது தமிழக அரசு தொல்லியல் துறையால் வரலாற்றுச் சின்னமாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றது.

## சமணச் சிற்பங்கள்

குடைவரைக் கோயில்களுக்கு மேற்கில் சற்று தொலைவில் தொங்கும் பாறை ஒன்றில் சில சமணத்திரு உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு சிற்பத்தின் கீழும் அதனைச் செய்யக் காரணமாயிருந்தவர் அல்லது பாதுகாப்பவர் பெயர்கள் கல்வெட்டாக வெட்டப்பட்டுள்ளன. இவற்றின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டாகும். மகாவீரர், பார்சுவநாதர், இயக்கி, அம்பிகா பத்மாவதி இயக்கி ஆகியோரின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இவற்றின் கீழ் உள்ள எட்டு கல்வெட்டுகள் இவற்றைச் செய்தவர்கள் பற்றிய தகவல்களைத் தருகின்றன. களவழிநாட்டு ஏனாதி நாடி என்பவர் ஒருதிருமேனியைச் செய்துள்ளார். திணைக்களத் தாரும், பொற்கோட்டுக் கரணத்தாரும் இதைக் காத்துள்ளனர். அச்சணந்தி எனும் துறவி செய்வித்த திருமேனியை நரசிங்கமங்கலம் எனும் இக்கிராமத்துச் சபையார் காத்துள்ளனர். தென்களவழி நாட்டைச் சேர்ந்த பெரு வேம்பத்தூர் செழியபாண்டி என்பவர் இயக்கர் படிமத்தைச் செய்து உள்ளார். வெண்புரையைச் சேர்ந்த சாத்தன் அரையன் ஒரு திருமேனியைச் செய்துள்ளான். வெண்பைக்குடியைச் சேர்ந்த வேட்டஞ்சேரி புதுமை எலியம்பூதி ஒரு திருமேனியைச் செய்துள்ளார்.

இத்திருமேனிகள் மீது அரைத்த வெண்சுதை பூசப்பட்டு அதன் மீது பல வண்ணங்களைக் கொண்டு அழகிய ஓவியங்களும் தீட்டப்பட்டுள்ளன. குத்துவிளக்குகள், சாமரங்கள், திருவாச்சிகள் ஆகியவை இன்னும் வண்ணம் மங்காது காணப்படுகின்றன. தமிழகத்தின் தொடக்க கால ஓவியக் கலை ஆய்வாளர்க்கு இவை நல்ல சான்றுகளாகும்.

ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமணம் இங்குச் சம்பந்தர் வருகையால் பின்னடைவுக்கு உள்ளானது. ஆனால் இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் இதே இடத்தில் மீண்டும் சமணம் தழைத்தது. அதற்குக் காரணமாக அமைந்த அச்சணந்திப் பெரியாரும் ஆனை மலையில் தங்கி உழைத்துள்ளார். தொடக்கத்தில் உருவ வழிபாட்டையும், பெண் தெய்வங்களையும் ஏற்காத சமணம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டளவில் தமது சிந்தனைப் போக்கை மாற்றிக் கொண்டது என்பதற்கு யானைமலை சமணச் சிற்பங்கள் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

இவ்வாறாக, வரலாற்றுத் தொடக்க காலம் முதல் இன்று வரை யானைமலை பாண்டிய நாட்டின் அரசியல் வரலாற்றிலும் சமய வரலாற்றிலும் கலை வரலாற்றிலும் சிறப்பிடம் பெற்றுள்ளது தெளிவாகிறது.

## பொய்கைக்கரைப்பட்டி

மதுரை அழகர்கோயில் சாலையில் அமைந்துள்ள இவ்வூரில் அழகர் கோயிலுக்குரிய நந்தவனங்களும் பொய்கையும் அமையப்பெற்றுள்ளன. இத்திரு நந்தவனங்களுள் ஒன்று கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் மிழலைக் கூற்றத்துக் கீழ்க் கூற்றிலமைந்திருந்த மஞ்சக்குடியைச் சேர்ந்த உய்ய வந்தான் திருநோக்க கலியானான தொண்டைமானார் என்பவரால் செய்விக்கப்பட்டுள்ளது. மற்றொரு நந்தவனம் அதே 13 ஆம் நூற்றாண்டில் இராயூரைச் சேர்ந்த தெற்காழ்வார் என்பவரால் செய்விக்கப்பட்டுள்ளது. இந்த நந்தவனத்திற்குக் குமார சூரியன் என்ற பெயர் வழங்கி வந்துள்ளது. கி.பி. 14-15 ஆம் நூற்றாண்டளவில் நல்லம வீதி ராஜ தேவர் என்பவர் 'ஆத்திரையன் திரு நந்தவனம்' என்ற பெயரில் மற்றொரு நந்தவனத்தை உருவாக்கியிருக்கிறார்.

அறுவகைத் தொழில் புரியும் நால்வகை இரதகாரர்கள் ஒன்று கூடி சாதிக்குப் பல நன்மைகள் செய்து வந்தவரான அழகர்கோயில் நம்பிமாரில் ஒருவரான திருவரங்குள முடையான் திருமலை ஆழ்வார் என்பவருக்கு அவர்

வாசலிலே பரிசட்டம், பூமி, தோரணம் போன்றவை கொடுத்துச் சிறப்புச் செய்ததைத் தெரிவிக்கும் கி.பி. 1307 ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இவ்வூரில் உள்ளது. கி.பி. 13 ஆம் நூற்றாண்டளவில் வேம்பற்றூரைச் சேர்ந்த சுந்தரத் தோளந் என்பவர் ஆசிரியம் (அடைக்கலப் பாதுகாப்பு) அமைத்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டொன்றும் இவ்வூரிலுள்ளது.

## குன்னத்தூர்

மதுரை வடக்கு வட்டத்தில் அமைந்துள்ள சிற்றூர் குன்னத்தூர். இது முற்பாண்டியர் காலத்தில் (கி.பி. 9-10ஆம் நூற்றாண்டில்) ஒரு பிரதமதேயக் கிராமமாகத் திகழ்ந்துள்ளது. குன்றத்தூர்க்குளக்கீழ் என்னும் நாட்டுப் பிரிவுக்குள் இவ்வூர் அமைந்துள்ளது. இங்குள்ள சிவன் கோயில் மூலபல ஈசுவரம் எனப் பெயர் பெற்றுள்ளது. இக்கோயில் செலவுகளுக்காக குன்றத்தூர்க்கு அருகில் காவனூர் என்னும் ஊரில் இருந்த அரையன் நக்கன் என்பவன் கோயில் அகநாழிகையார் எனும் பூசாரிகளிடம் கொடை அளித்துள்ளான்.

குன்னத்தூர்க்கு அருகிலேயே வரிச்சியூர் என்ற ஊரும் உள்ளது. இங்குக் கி.மு. 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராமி கல்வெட்டு ஒன்றும் உள்ளது. சமணர் வாழ்ந்த குகையும் கற்படுக்கைகளும் காணப்படுகின்றன. இம்மலை யிலேயே உதயகிரீஸ்வரம், அஸ்தகிரீஸ்வரம் என்ற இரண்டு குடைவரைச் சிவன் கோயில்கள் உள்ளன. இவை கருவறை மட்டும் கொண்டு எளிமையாகக் குடையப்பட்டு உள்ளன. இங்குள்ள வாயிற்காவலர் சிற்பங்களைக் கொண்டு இவை 8 ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படுகின்றன.

இதே ஊரில் தனியாணை ஈஸ்வரம் என்ற பெயரில் மற்றொரு சிவன் கோயில் உள்ளது. அங்குள்ள பிற்பாண்டியர் கல்வெட்டுகள் மிகவும் சிதைந்த நிலையில் உள்ளன. வாணாதிராயர், நாயக்கர் காலங்களிலும் இவை நன்கு நிருவகிக்கப்பட்டு உள்ளன.

# 16. மேலூர் வட்டம்

## அழகர்கோயில்

*மதுரை நகருக்கு வடக்கே 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அழகர்கோயில். இயற்கை எழில் சூழ்ந்த மலையும், அதன் சரிவில் அமைந்துள்ள அழகர்கோயிலும் நெடிய வரலாற்றுச் சிறப்பிற்குரியவை. அழகர்மலையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய சமணர் உறைவிடங்களும், தமிழ் பிராமிக் கல்வெட்டுகளும் உள்ளன. எனவே திட்டவட்டமான இரண்டாயிரம் ஆண்டுக்கால வரலாறு இம்மலைக்கு உண்டு.*

*அழகர்மலை தமிழ் பிராமிக் கல்வெட்டுகள்:*

1. மதிரய் பொன் கொல்வன் அதன் அதன்.
2. ... அ னாகன் த ...
3. கணி நாகன் கணி நாதன் இருவர் அமகல்
4. மத்திரைகே...
5. உபு வாணிகன் வியக்கன் கணதிகன்
6. கணக அதன் மகன் அதன் அதன்
7. ஸபமிதாஇன் பமித்தி.
8. பணிதன வாணிகன் நெடுமலன்
9. கொழுவணிகன் எளசந்தன்
10. ஞ்சி கழுமாற நதன் தார அணிஇ கொடு பிதஅவன்
11. காசபன் அவ்விரு (அ)ர்உம் குடுபிதோர்
12. வெண்பளிஈ அறுவை வணிகன் எளஅ அடன்
13. தியன் சந்தன்

*மேற்கண்ட கல்வெட்டுகள் மூலம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே சமணர்கள் அழகர்மலையில்*

தங்கியிருந்தமையும், அவர்களுக்கு வணிகர்கள் பலர் இருப்பிடம் செய்து கொடுத்தனர் என்பதையும் அறிகிறோம். வணிகர்களில் பொன்வணிகன், அறுவை வணிகன், பணித வணிகன், கொழுவணிகன் என்று பலபிரிவினரும் அன்றே இருந்தமையும் பெறப்படுகிறது. கி.பி. 8-9ம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டு அச்சணந்தி எனும் சமணத்துறவி இம்மலையில் வாழ்ந்ததாகக் கூறுகின்றது.

திருமாலிருங்குன்றம், இருங்குன்றம், திருமாலிருஞ் சோலை, சோலைமலை திருவரை என்று பலபெயர்கள் இம்மலைக்குண்டு. இதனைச் சிலப்பதிகாரம் "திருமால் குன்றம்" என்று கூறுகிறது.

பூதத்தாழ்வார், தம்பாடலுள், இருஞ்சோலை மலை, இருஞ்சோலை என்று குறிப்பிடுகிறார். நம்மாழ்வார், மாலிருஞ்சோலை, திருமாலிருஞ்சோலை மலை என்று பாடுகிறார். திருமங்கை ஆழ்வாரும் இவ்வாறே குறிப்பிடுகின்றார். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமங்கை யாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோர் இம்மலையில் வாழும் திருமாலைப் பாடி யுள்ளனர். முருகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றான பழமுதிர்ச்சோலை இம்மலையே என்பர். இம்மலையின் பெயர் சோலைமலை எனவும் பழம் உதிர்கின்ற சோலை மலை எனவும் இதனைக் கூறுவர். நக்கீரர் தன்னுடைய திருமுருகாற்றுப்படையில்,

> இழுமென இழிதரு மருவி
> பழமுதிர் சோலைமலை கிழவோனே

என்று குறிப்பிட்டுள்ளார். சிலம்பாறு இங்குச் சிறப்பித்துப் பேசப்படும் ஆறாகும். மலை மீது முருகனும் மலை அடிவாரத்தில் திருமாலும் கோயில் கொண்டு சிறப்பித்த மலை அழகர்மலையாகும். பரிபாடல் சிலப்பதிகாரம், நாலாயிர திவ்யப்பிரபந்தம் ஆகிய இலக்கியங்களில்

குறிப்பிடப்படும் இக்கோயில் சங்க காலந்தொட்டு இருந்து வந்ததில் ஐயமில்லை. ஆனால் கல்வெட்டுச் சான்றுகள் தொடக்க காலத்தில் (முற்காலப் பாண்டியர் காலத்தில்) ஏனோ கிடைக்கப் பெறவில்லை. அழகர்கோயிலில் உள்ள கல்வெட்டுகளிலேயே காலத்தால் முந்தியது சோழ மன்னன் முதலாம் இராசராசனின் காலத்ததாகும். இராசராசனின் 22 ஆம் ஆட்சி ஆண்டில் தரப்பட்ட நிலக்கொடையைப் பற்றி இக்கல்வெட்டு கூறுகிறது. பிற்காலப் பாண்டியர் காலத்தில் இக்கோயில் அவர்களின் சிறப்பான கவனத்தைப் பெற்றுள்ளது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், முதலாம் சடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் இக்கோயிலில் பல நற்பணிகள் செய்துள்ளனர். போசள மன்னன் வீரசோமேஸ்வரன் தன் பெயரால் வீரசோமேஸ்வரன் சந்தி வழிபாடு ஒன்றை ஏற்படுத்தினான்.

பாண்டிய நாட்டுப் பகுதியில் இருந்த வாணாதிராயர் கள் என்னும் குறுநிலத் தலைவர்கள் மிகுந்த வைணவப் பற்றாளர்கள். அவர்கள் இக்கோயிலில் பல திருப்பணிகள் செய்துள்ளனர். 'திருமாலிருஞ்சோலை நின்றான், மாவலி வாணாதிராயன்' என்ற சிறப்புப் பெயர்கள் இவர்களுக்கு உண்டு. கி.பி. 1464இல் இவர்களால் இக்கோயில் உபானம் முதல் ஸ்தூபி வரை புதுப்பிக்கப்பட்டது. விஜயநகர வேந்தர் கிரு ணதேவராயர் மூன்று நாட்கள் இக்கோயிலில் தங்கியிருந்தார். மதுரை நாயக்க அரசர்களும் அழகர்கோயிலின் வளர்ச்சியில் அக்கறை காட்டினர். மூன்றாம் திருச்சுற்று திருமலை நாயக்கரால் கட்டப்பட்டது. இங்கு வசந்த மண்டபத்தில் இராமயணக் காட்சிகள் அழகிய ஓவியங்களாக உள்ளன. அழகர்மலை முக்கியமான அரணாகவும் விளங்கியது. இங்குப் பிற்காலத்தில் கோட்டை கட்டப்பட்டு படைகள் தங்க வைக்கப்பட்டன. கோயில் வாயிற் கோபுத்தின் படிகள் 18 ஆம் படி கருப்பராக வழிபடப்படுகின்றன.

மீனாட்சி அம்மன் திருக்கல்யாணத்துடன் அழகர் உலாவையும் தொடர்புபடுத்தி ஆண்டுதோறும் கொண்டாடப்படும் சித்திரைத் திருவிழா தமிழகத்தில் முக்கியத் திருவிழாக்களுள் ஒன்றாகும்.

## திருமோகூர்

மதுரையிலிருந்து மேலூர் செல்லும் சாலையில் உள்ள ஒத்தக்கடை என்னும் ஊரிலிருந்து திருவாதவூர் செல்லும் சாலையில் சென்றால் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள திருமோகூரை அடையலாம். 108 வைணவத் தலங்களுள் திருமோகூரும் ஒன்று. நம்மாழ்வாரும், திருமங்கை ஆழ்வாரும், மணவாள மாமுனிகளும் இவ்வூரைப் பாடியுள்ளனர்.

சங்க காலத்திலேயே இவ்வூர் வலிமையான கோட்டையைக் கொண்டு இருந்தது. பழையன் என்னும் சிற்றரசன் இவ்வூரை ஆண்டு வந்தான். சங்கப் புலவர்கள் சிலர் இவ்வூரைப் பாடியுள்ளனர். தாலமி தன்னுடைய நூலில் (140 கி.பி) இவ்வூரைக் குறிப்பிட்டுள்ளார். மோகூர் என்ற பழைய பெயரே 'திரு' என்னும் அடைமொழியுடன் வழங்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில்,

> வளவயல்சூழ் திருமோகூர்
> எண்திசையும் ஈன்கரும்பொடு பெருஞ்செந்நெல்
> விளையக் கொண்ட கோயில்

என்றும் நம்மாழ்வார் திருமோகூரைக் குறித்துப் பாடியுள்ளார். இவ்வாழ்வார்கள் காலமான 8-9ஆம் நூற்றாண்டிலிருந்து இங்குக் கோயில் இருந்துள்ள போதிலும் தற்போது இருப்பது பிற்காலப் பாண்டியர் மற்றும் நாயக்கர் கலைப் பாணியாகவே உள்ளது. இங்குள்ள இறைவன் திருப்பாற்கடலில் பாம்பணைமேல் பள்ளி கொண்ட கோலத்தில் உள்ளார். காளமேகப் பெருமாள் மோகனவல்லி என்பது இறைவன் இறைவியர் பெயராகும். இங்குள்ள சுதர்சனர் சிற்பம் மிகவும்

குறிப்பிடத் தக்கதாகும். திருமலை நாயக்கர், பெரியமருது, சின்னமருது சகோதரர்கள் சிற்பங்களும் இங்குக் கலை நுணுக்கத்துடன் செதுக்கப்பட்டுள்ளன.

திருமோகூரில் உள்ள கல்வெட்டுக்களில் காலத்தால் முந்திய கல்வெட்டு முதலாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டாகும். காளமேகப் பெருமாள் கோயில் தெப்பக்குளத்தின் மேல்புறம் உள்ள தனிக் கல்லில் இக்கல்வெட்டின் ஒரு பகுதி மட்டுமே எஞ்சியுள்ளது. 'விண்ணகராழ்வார் திருமுற்றம்' எனக் கோயில் திருமுற்றம் குறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டு முழுமையாகக் கிடைக்காததால் சோழர் காலத்தில் இக்கோயில் இறைவனுக்கு வழங்கிய பெயரில் 'விண்ணகராழ்வார்' என்ற பிற்பகுதியைப் பற்றி மட்டுமே தெரிந்து கொள்ள முடிகிறது. எனினும் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் (கி.பி. 1070-1120) இப்பெருமாள் கோயில் சிறப்பான நிலையில் இருந்துள்ளமையை இக்கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

துங்கவனம் என்ற பகுதியில் பிரம்ம தீர்த்தக் கரையில் முதலாம் குலசேகர பாண்டியனின் 40வது ஆட்சி யாண்டியல், (கி.பி. 1308) சுந்தர பாண்டிய சோழ கோனார் என்பவர், முன்னாளில் இறங்கிக் கிடந்த வேதநாதரை எழுந்தருளுவித்து அமுதுபடி, சாத்துப்படி உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்கும் வழிவகை செய்துள்ளார். இக்கோயில் இன்று யானைமலையின் தென்கோடியிலுள்ளது.

காளமேகப் பெருமாள் கோயிலில் ஸ்ரீ சுதர்சனர் (சக்கரத்தாழ்வார்) வழிபாடு இன்றைய தினம்தனிச் சிறப்புமிக்க வழிபாடாகத் திகழ்ந்து வருகிறது. சுமார் 4 அடி உயரத்தில் 16 திருக்கரங்களுடன் சக்கரத்தாழ்வார் காட்சி அளிக்கிறார். சக்கரத்தாழ்வாரின் பின்புறம் யோக நரசிம்மரின் திரு உருவம் காணப்படுகிறது. இத்திருக் கோயிலில் சக்கரத்தாழ்வார் திருமேனியைக் காளமேகமான காங்கேயன் என்பவர் சடையவர்மன் சுந்தர பாண்டியனின்

8வது ஆட்சியாண்டில் (கி.பி. 1259) வைகாசித் திங்கள் இருபத்தொன்றாம் நாளில் எழுந்தருளுவித்துள்ளார். இவரே, இத்திருக்கோயிலில் சேனாபதி ஆழ்வாரான விஸ்வச்சேனருக்குச் சிற்றாலயமும் எடுப்பித்துள்ளார். பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில் காளமேகப் பெருமாள் கோயிலில் மார்கழி மாதத்தில் கல்யாணத் திருநாள் கொண்டாடப்பட்டுள்ளது. இதற்கான நிவந்தம் குந்தவைச் சதுர்வேதி மங்கலத்து அந்தணர்களின் பொறுப்பில் இருந்துள்ளது. காளமேகப் பெருமாளின் பெயரால் கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில் இப்பகுதியில் திருக்காளமேக நல்லூர் என்ற ஊர் இருந்துள்ளது.

காளமேகப் பெருமாள் கோயிலில் இன்றுள்ள கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் போன்ற பகுதிகள் கி.பி. 16 ஆம் நூற்றாண்டளவில் புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளவையாகக் காணப்படுகின்றன. கி.பி. 1551 ஆண்டைச் சேர்ந்த இரண்டு கல்வெட்டுக்கள் மகாமண்டபத் தென் சுவரிலுள்ளன. வசவண்ணர் நாயகத்தில் திம்மப்ப நாயக்கர் என்பவர் ஆண்டொன்றுக்கு 450 கலம் நெல் மற்றும் 36 பொன் செலவில் பெருமாளுக்கு நித்திய நைவேத்தியங்கள் படைத்திட வழிவகை செய்துள்ளார். இவர்களே கூடலழகர் கோயிலிலும் விமானத்தைப் புதுப்பித்துக் கட்டியுள்ளனர். இந்திருக்கோயிலின் திருச்சுற்றுச் சுவர், கி.பி. 1699-1700 ஆம் ஆண்டுகளில், மதுரை நாயக்கரின் தளவாயாக விளங்கிய நரசப்பய்யனின் அனுமதியின் பேரில் வெங்கப்பய்யன் என்பவரால் கட்டப்பட்டுள்ளது.

காளமேகப் பெருமாள் கோயிலில் கலை நயம் மிக்க மண்டபங்கள் பல உள்ளன. கிழக்கு நோக்கியுள்ள திருவாயிலைக் கடந்ததும் முதலில் உள்ள கம்பத்தடி மண்டபமான மருது மண்டபத்தில் பெரிய மருது, சின்ன மருது ஆகியோரின் சிலைகளுள்ளன. மருது மண்டபத்தை அடுத்துள்ள கருட மண்டபத்தில் இராமர், சீதை,

*இலக்குமணர், இரதி, மன்மதன் சிற்பங்களுள்ளன. பெரிய திருவடி (கருடன்) இங்குக் காட்சியளிக்கிறார்.*

*திருமோகூர், கோயில்குடி, திரும்பூர் போன்ற பிற பெயர்களாலும் அழைக்கப்பட்டுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கர்னல் ஹெரோன் என்பவர், கோயில்குடியைத் தாக்கி அங்குக் கோயிலிலிருந்த செப்புத் திருமேனிகளை (சிலைகளை) எடுத்துச் சென்றதாகத் தெரிகிறது.*

*திருமோகூர்ப் பெருமாள் மீது காளமேகப் புலவர் பாடியதாகத் தனிப் பாடலொன்றுள்ளது. அப்பாடல் கீழ்வருமாறு:*

பொன்னனைவா ளரக்கனை நூற்றுவரைக் காலைப்
பொருசிலையைக் கனைகடலைப் பொன்ன னீன்ற
நன்மகற்காய்ச் சுரர்க்காயை வருக்காய்க் காத
னப்பின்னைக் காய்ச் சானரிக்காய் நடவைக் காக
மன்னுகிரால் வடிக்கணையால் வளையாற் புள்ளால்
வயங்குதோள் வலியால் வானரங்களாலும்
முன்னுடற்கீ றிச்சிரங்கொண் டமரில் வீழ்த்தி
முதலொடுங்கொண் டிறுத்தடைத்த மோகூ ரானே

## திருவாதவூர்

*மதுரைக்கு வடகிழக்கில் மதுரையிலிருந்து 25 கி.மீ. தொலைவிலும், மேலூரிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் இவ்வூர் அமைந்துள்ளது. சங்க காலத்துப் புலவர்களுள் ஒருவரான கபிலர் திருவாதவூரில் அந்தண மரபில் பிறந்தவராகக் கருதப்படுகிறார். திருவாதவூரிலுள்ள ஓவாமலையில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த தமிழ் பிராமிக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில்,*

1. பாங்காட அர்இதன் கொட்டுபிதோன்
2. உபசன் பர்அசு உறை கொட்டுபிதோன்

*ஆகிய வாசகங்கள் உள்ளன. எனவே சங்க காலத்திலிருந்தே இவ்வூர் சிறப்புடன் விளங்கி வருவது தெளிவு. சங்க காலத்தில் இவ்வூரில் சமண முனிவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதும் இதனால் அறியப்படுகிறது.*

*மாணிக்கவாசகர் திருவாதவூரில் வாழ்ந்த ஆமாத்திய பிராமணர் குலத்தைச் சேர்ந்த சம்பு பாதாசாரியர் என்பாருக்கும் சிவஞானவதிக்கும் மகனாகப் பிறந்து வளர்ந்ததால் 'திருவாதவூரர்' என்றும், பெயர் பெற்றார் என்பர்.*

திருவாதவூரர்ச் சிவபாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவை

*என்ற நம்பியாண்டார் நம்பியின் கோயில் திருப்பண்ணியர் விருத்தம் இக்கருத்தை உறுதி செய்வதாக உள்ளது.*

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதயம் நிறைவன் தொண்டர்
ஆடியிற் சோதி திருவாதவூரர் நல்லாணிமகம்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே

*என்ற தனிப் பாடலும் இக்கருத்துக்கு வலு சேர்க்கிறது.*

அப்பருக்கென் பத்தொன் றருள்வாத வூரர்க்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம்

*என்ற தனிப் பாடலிலிருந்த மாணிக்க வாசகர் 32 வயது மட்டுமே இம்மண்ணுலகில் வாழ்ந்திருந்தைத் தெரிந்து கொள்ள முடிகிறது.*

*சிவாலயங்களைப் பற்றி ஞானசம்பந்தர் குறிப்பிடும் போது ஸமயிண்டீச்சுரம் வாதவூர் வாரணாசி எனத் திருவாதவூரையும் குறிப்பிட்டிருப்பதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூரில் சிவாலயம் இருந்துள்ள தென்பது உறுதியாகிறது. வாயு பூசித்த தலம் என்பதால் வாதபுரி ஈஸ்வரர் என்று இக்கோயிலிறைவனுக்குப் பெயர்*

ஏற்பட்டதாகக் காரணம் கூறுவர். 'வாதம்' என்பதற்குத் 'தர்க்கம்' என்றொரு பொருளிருப்பதால், இவ்வூரில் பல சமய தத்துவவாதிகளிலிருந்து வாதம் புரிந்தமையால் இவ்வூருக்கு 'வாதவூர்' என்று பெயரேற்பட்டதாகவும், இவ்வாதபுரியில் எழுந்தருளியுள்ள இறைவன் என்ற பொருளில் இறைவனுக்கு வாதபுரி ஈஸ்வரன் என்ற பெயர் ஏற்பட்டுள்ளதாகவும் மாற்றுக் கருத்துமுண்டு.

இத்திருக்கோயிலின் கருவறை சதுர வடிவமானது. கூடம், பஞ்சரம், சாலை போன்ற அமைப்புகளைக் கொண்டுள்ளது. கருவறைக்கு முன்னர் அர்த்த மண்டபமும், மகா மண்டபமும் உள்ளன. மண்டபத்தின் தென் பகுதியில் ஆறுகால் பீடம் உள்ளது. நடராசருக்குத் தனி சன்னிதி உள்ளது. இங்கு நூற்றுக்கால் மண்டபமும் காணப்படுகிறது. சுவாமி சன்னதிக்குத் தெற்கில் அம்மன் சன்னதி உள்ளது. பெரும்பாலும் சிவாலயங்களில் இறைவனுக்கு இடது புறத்திலேயே இறைவிக்குரிய சன்னதியை எடுப்பது மரபு. மதுரை மீனாட்சி கோயிலிலிருப்பது போலவே திருவாத வூரிலும் இறைவிக்குரிய சன்னதி சுவாமி சன்னதிக்கு வலப்புறமுள்ளது. மாணிக்கவாசகரின் தந்தையார் இச்சிவாலயத்தில் அர்ச்சகராகப் பணிபுரிந்தவர் என்றும், மாணிக்கவாசகர் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்த வரென்றும் கருதுவர். எனவே இக்கோயிலில் மாணிக்க வாசகரின் திருமேனி எழுந்தருளுவிக்கப்பட்டுள்ளது.

இத்திருக்கோயிலில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு முதல் அண்மைக் காலம் வரையிலான கல்வெட்டுக்கள் பல உள்ளன. இக்கல்வெட்டுக்களிலிருந்து திருவாதவூர் தென்பறப்பு நாடு என்ற நாட்டுப் பிரிவிற்குள் இருந்தமையையும், இச்சிவாலயம், 'திருவாதவூர் உடையார் திருமறை நாயனார் கோயில்' என்று சுட்டப்பட்டு வந்தமையையும் தெரிந்து கொள்ள முடிகிறது. திருவாதவூர் கோயிலின் தேவதான இறையிலி நிலங்கள் வேத நாயக நல்லூர், வலங்கை மீகாமநல்லூர், பள்ளிக்குறிச்சியான சோணாடு கொண்ட பெருமாள் நல்லூர், திருமறை நாயக

நல்லூர், வேலங்குடியான தேவர்கள் தேவ நல்லூர், செங்குளமான நாற்பத்தெண்ணாயிர நல்லூர், காமர் மங்கலமான ஸ்ரீமாகேசுவர நல்லூர், மண்டலிகர் கம்பீர நல்லூர் எனப் பல ஊர்களில் இருந்துள்ளமையிலிருந்து பிற்காலப் பாண்டியர் காலத்தில் இத்திருக்கோயில் மிகச் சிறப்பான நிலையில் இருந்திருப்பது தெளிவாகிறது.

முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் சேரநாட்டை வெற்றி கொண்டதன் நினைவாக 'சேரனை வென்றான்' என்ற பட்டம் பூண்டான். இச்சிறப்புப் பெயரால் திருவாதவூர் சிவாலயத்தில் 'சேரனை வென்றான் சந்தி' ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதேபோன்று 'வலங்கை மீகாமன் சந்தி' என்ற பெயரிலும் ஒரு சந்தி ஏற்படுத்தப்பட்டுள்ளது. முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 28வது ஆட்சியாண்டளவிலேயே (கி.பி. 1296) இத்திருக்கோயிலில் அம்மன் சன்னதி இருந்துள்ளது. விக்கிரமபாண்டியன் என்பவரால் இந்நாச்சியார் எழுந்தருளுவிக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. நாச்சி யாருக்கு சந்தியா தீபம் எரித்துவர வழிவகை செய்யப்பட்டுள்ளது.

இத்திருக்கோயிலில் சந்திரசேகரர், கௌரி ஆகிய திருமேனிகளைத் தாசியான குழைமஞ்சாள் அரசனான ஆலால சுந்தரநங்கை செய்தளித்து வீதி உலா எழுந்தருளவும் வழிவகை செய்ததாகக் கருதலாம். இந்நிகழ்வு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 21வது ஆட்சியாண் டாகிய கி.பி. 1237ல் நிகழ்ந்துள்ளது. இத்திருக்கோயிலில், சுப்பிரமணியப் பிள்ளையார் திருமேனி, கி.பி. 14 ஆம் நூற்றாண்டளவில், ஆரணந்தொழ நின்றானான இராசகண்ட கோபாலர் செய்ய பெருமாள் பேரால் எழுந்தருளுவிக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் மேற்குத் திருச்சுற்று மாளிகையில் கிழக்கு நோக்கிய நிலையில் 63 நாயன்மார்களின் உருவங்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில் வழிபாட்டிலிருந்துள்ளன. இன்று

இதனைப் புலப்படுத்துவனாக சைவ அடியார்களின் பெயர் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் மட்டும் எஞ்சியுள்ளன. பராக்கிரம பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1315 - 1334) இத்திருக்கோயில் வழிபாட்டிற்கு நாள் ஒன்றுக்கு முக்குறுணிப்பூவும், ஆண்டொன்றுக்கு 20,000 செங்கழுநீர்ப் பூக்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கோயிலில் வழிபாடு 14 ஆம் நூற்றாண்டில் மிகச் சிறப்பான நிலையில் இது இருந்தமையைப் புலப்படுத்துகிறது.

இவ்வூரிலுள்ள ஏரிக்கு உலகளந்த சோழப் பேரேரி என்ற பெயர் கி.பி. 14 ஆம் நூற்றாண்டளவில் வழங்கி வந்திருக்கிறது. இவ்வேரியில் பெரிய மடை, சிறிய மடை என்ற இரு மடைகள் பயன்பாட்டிலிருந்து வந்துள்ளன. தற்போது கோயிலுக்கு வடக்கிலுள்ள குளத்தினை மேற்சுட்டிய ஏரியாகக் கருதலாம். மூன்றாம் குலோத்துங்க சோழனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1195) மங்கலக்கோன் பாஞ்சலன் என்பவர் இக்குளத்திலமைத்துள்ள மடையை அமைத்துள்ளார். 'பாஞ்சாலராஜந்" என்ற பெயர் இதற்கு வழங்கி வந்தமையை அம்மடையிலுள்ள பாடல் கல்வெட்டொன்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இம்மடை பின்னர் சிதைவுற்றிருக்கக் கூடும். முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் (கி.பி. 1225) மதுரையிலிருந்த கைக்கோளன் செயமுடையான் விரதமுடிச்சானான பராக்கிரமசிங்க தேவன் என்பவன் இம்மடையை அமைத்து அதற்கு "விக்கிரமசிங்க தேவன் மடை" என்று பெயரிட்டுள்ளான்.

இவ்வூரில் பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில், முதலியார் பராக்கிரம தேவர் என்பவரைத் தலைவராகக் கொண்டு செயல்பட்டு வந்த சைவ மடம் ஒன்றிருந்துள்ளது. இம்மடத்தினை நிர்வகிப்பதற்காக அம்பலத்தாடி நல்லூரில் இறையிலியாக நிலம் வழங்கப்பட்டிருந்திருக்கிறது.

இவ்வூரில் பிடாரி கோயிலுக்குப் பின்புறமுள்ள சதிக் கோயில், கொலை செய்யப்பட்ட தன் கணவரோடு உடன் கட்டை ஏறிய வெங்கம்மாளின் நினைவால் ஏற்படுத்தப் பட்டுள்ளதென்றும் இவ்வெங்கம்மாளின் வீரதீரச் செயலே இவ்வூருக்கு வலிமை கூட்டி வருவதாகவும் கருதப்படுகிறது. சிவன் கோயிலுக்குத் தென்புறமுள்ள தெருவில் விளக்குத் தூண் ஒன்று உள்ளது. 12.12.1911 இல், ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்தியச் சக்கரவர்த்தியாக டில்லியில் முடி சூட்டிக் கொண்ட நினைவைப் போற்றும் வகையில் இவ்விளக்குத் தூண் நடப்பட்டுள்ளது.

**பனங்காடி**

மேலூர் வட்டத்தில் திருவாதவூருக்குக் கிழக்கில் 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊர் பனங்காடி. திருவாதவூர் பிராமிக் கல்வெட்டில் குறிப்பிடப்படும் பங்காட ஊர் என்பதே பனங்காடி ஆகியிருக்கலாம் எனக் கருதலாம். இவ்வூரில் பிற்பாண்டியர் காலத்தில் சிவன் கோயில் ஒன்றும், வீற்றிருந்த பெருமாள் என்னும் திருமால் கோயில் ஒன்றும் சிறப்பாக வழிபடப்பட்டுள்ளன. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் உத்தம சோழ விண்ணகராழ்வார் என்று இறைவன் பெயர் குறிப்பிடப் படுகிறது. பனங்காடி என்பது தென்பறப்பு நாட்டுப் பனைங்குளம் என்று கல்வெட்டுகளில் கூறப்படுகிறது. இராசேந்திரச் சோழச் சதுர்வேதி மங்கலம் என்று சோழர் காலத்தில் இவ்வூர் அந்தணர் வாழ்விடமாக விளங்கி யுள்ளது. இவ்வூரில் இருந்த பலசேரிகளும், தெருக்களும் கல்வெட்டுகளில் இடம்பெறுகின்றன.

களவழி நாடாழ்வான் ஓலை ஆணைமூலம் இவ்வூர் கோயில் செலவுகளுக்காக நிலங்கள் கொடை அளிக்கப் பட்டன. இராசேந்திர சோழச் சதுர்வேதி மங்கலத்தின் பிடாகையாக தாமோதர மங்கலம் என்ற ஊரும் குறிப்பிடப்படுகிறது. இங்குள்ள கல்வெட்டு ஒன்றின் மூலம் அழகர்கோயிலில் உள்ள சக்கரத்தாழ்வார் கோயிலை

அமைத்தவன் துஞ்சலூருடையான் என்பதை அறிகிறோம். இச்சக்கரத்தாழ்வாருக்கு அமுதுபடி சாத்துப்படிக்காக இச்சதுர்வேதி மங்கலத்தின் கீழ் உள்ள பிடாகைகளின் நிலவரிகள் வழங்கப்பட்டன.

## கொட்டக்குடி

மேலூர் வட்டத்தில் பனங்காடிக்கருகிலுள்ள இவ்வூரில் கம்மாளக் கண்மாய் என்ற கண்மாய் உள்ளது. இக்கண்மாயின் மடைக்கருகிலுள்ள கல்வெட்டில் இருந்து, இம்மடை எம்மண்டலமுங் கொண்டருளிய குலசேகர பாண்டியனது 29வது ஆட்சியாண்டு முதல் (கி.பி. 1297) இன்று வரை இருந்து வருவதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. இக்கண்மாய் இப்பகுதியில் ஏறத்தாழ 700 ஆண்டுகளாகப் பயன்பாட்டிலிருந்து வருகிறது எனலாம்.

## ஆமூர்

மதுரையில் மேலூர் வட்டத்தில் அமைந்துள்ளது இவ்வூர். திருமோகூரிலிருந்து திருவாதவூருக்குச் செல்லும் சாலையில் அமைந்துள்ள இவ்வூர் வரலாற்று ஆவணங்களில் நல்லணி ஆமூர் எனப் பெயர் பெறுகிறது. முற்காலத்தில் சிறந்த வணிக மையமாக இருந்த இவ்வூர் இன்று மிகச் சிறிய ஊராக மாறிவிட்டது. ஐயப்பொழில் ஈசுவரம் என்ற பெயரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் திசை ஆயிரத்து ஐநூற்றுவர் என்னும் வணிகக் குழுவினர் இங்குக் கோயில் கட்டியுள்ளனர். பிற்பாண்டியக் கட்டடக் கலைக்குச் சிறந்த சான்றாகத் திகழும் இக்கோயில் இன்று பெரிய அளவில் சேதமுற்றுள்ளது.

முதலாம் சடையவர்மன் குலசேகரன், அவன் இளவல் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோரின் காலக் கல்வெட்டுகள் இக்கோயிலின் வரலாற்றுத் தொன்மையைத் தெரிவிக்கின்றன. இவ்வூர் தென்பறப்பு நாடு என்னும் உட்பிரிவுக்குள் அடங்கியுள்ளது.

திருப்பூவனம் என்னும் தேவாரப் பாடல் பெற்ற சைவத் தலத்திற்கு இவ்வூர் தேவதானமாக ஒரு காலத்தில் விடப்பட்டுள்ளது. இங்கிருந்த சிவபிராமணர்களும், அரசியல் அதிகாரிகளும் இக்கோயிலின் வழிபாட்டிற்குச் செய்த ஏற்பாடுகள் இங்குள்ள கல்வெட்டுகளில் கூறப்படுகின்றன. அடிகள் அறியாந் காடு வெட்டி என்பவர் இக்கோயில் கருவறையின் நிலை வாசலைச் செய்தார் என்பதையும் நிலைக் கல்லிலுள்ள கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.

## கீழவளவு

மதுரை திருப்பத்தூர் சாலையில் மதுரையிலிருந்து சுமார் 45 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூருக்குச் சற்று முன்பாக உள்ள குன்றில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே சமண முனிவர்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இங்குள்ள குகைத் தளத்தில் கீழே படுக்கைகளும், பாறையின் மேல் முகப்பில் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. குகைத் தளத்துக் கற்படுக்கைகள் நன்கு வளவளப்பாகத் தேய்த்தமைக்கப்பட்டுள்ளன. குகைத் தளத்தின் முகப்புப் பகுதியில் புருவம் வெட்டப்பட்டு, மழைநீர் குகைத் தளத்திற்குள் நுழைந்து விடாதுவடியும்படி செய்யப்பட்டுள்ளது.

"உப[ச] அன் தொண்டி[ல] வோன் கொடு பளி இ"

என்ற வாசகம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுத் தமிழ் பிராமி எழுத்துக்களில் வெட்டப்பட்டுள்ளது. தொண்டியைச் சேர்ந்த இ[ல] வோன் இப்பள்ளியை உருவாக்கி அளித்துள்ளமையை இதிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. சங்க காலத்தில் தொண்டிக்கும் இவ்வூருக்கு மிடையே தொடர்பிருந்திருப்பதையும் இக்கல்வெட்டுப் புலப் படுத்துகிறது.

குகைத் தளத்தின் மேற்புறத்தில் மூன்று தீர்த்தங்கரர் உருவங்கள் அமர்ந்த நிலையில் செதுக்கப்பட்டுள்ளன.

குகையில் கீழ்ப்புறத்தில் ஆறு தீர்த்தங்கரர் சிற்பங்கள் உள்ளன. இவ்வாறுள் இரண்டு சிலைகள் நின்ற நிலையிலுள்ள பார்சுவநாதர் உருவங்களாகக் காணப்படு கின்றன. இங்குள்ள சிற்பங்கள் மீது வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. தற்பொழுது அவை ஒளி இழந்து காணப்படுகின்றன. பச்சை, சிவப்பு, மஞ்சள், கறுப்பு வண்ணங்களில் இவ்வோவியங்கள் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து இப்பகுதியில் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டுகளில் சமண சமய வழிபாடு மிகவும் சிறப்பான நிலையிலிருந் திருப்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

இத் திருமேனிகளில் ஒன்றைச் சங்கரன் ஸ்ரீ வல்லபன் என்பவன் செய்வித்து நாள்தோறும், அத்திருமேனிக்கு முன்னாழி அரிசியால் திருவமுது படைத்துவர வழிவகை செய்திருப்பதோடு, திருநந்தா விளக்கெரிப்பதற்காக ஐம்பது ஆடுகளையும், தானமாகத் தந்துள்ளார். பஞ்ச பாண்டவர் மலை அடிவாரத்திலுள்ள குகைத் தளத்திற்கு அருகிலுள்ள பாறையில் ஸ்ரீகட்டி என்பவர் கல்லுரல் அமைத்தளித் துள்ளார். தமிழ் பிராமி கல்வெட்டுள்ள குகைத் தளத்திற்கு அருகில் ஸ்ரீகாளன் அரட்டி என்பவர் கல்லுரல் அமைத்தளித்துள்ளார்.

## மேல வளவு (பறம்புக் கண்மாய்)

மேலவளவிற்கு வடமேற்கேயுள்ள சோமகிரிமலை, முறிமலை என்ற இரண்டு மலைகளுக்கிடையில் எடுக்கப் பட்டுள்ள கரையுடன், புறம்புக் கண்மாய் என்ற கண்மாயுள்ளது. இக்கண்மாயின் கலிங்குக்கு அருகில் உள்ள பாறையில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட் டொன்றிலிருந்து, பிற்காலப் பாண்டியர் மரபைச் சேர்ந்த முதலாம் மாறவர்மனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1238-39 அளவில்) கோவூருடையான் ஆள்வான் சக்கரக்கையன் என்ற அலுவலரால், இக்கண்மாயின் கரை உயர்த்தப் பட்டுள்ளமையையும், கண்மாயின் உள்வாய்ப் பகுதிகளில்

கல்லிட்டுப் பரப்பி கண்மாய் பலப்படுத்தப்பட்டுள்ள மையையும், தெரிந்து கொள்ள முடிகிறது. மேலும், இக்கண்மாய் அமைந்துள்ள ஊர்ப் பகுதிக்குக் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் 'பறம்பான நாராயண மங்கலம்' என்ற பெயர் வழங்கி வந்திருப்பதையும் இக்கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இங்குள்ள மற்றொரு கல்வெட்டிலிருந்து விசயநகர வேந்தர் விருப்பாச்சராயர் காலத்திலும் (கி.பி. 15 ஆம் நூ.ஆ) இவ்வூர்ப்பகுதிக்குப் புறம்பான திருநாராயணமங்கலம் என்ற பெயர் வழங்கியிருப்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. எனவே, இன்று இக்கண்மாய்க்கு வழங்கி வரும் 'பறம்புக் கண்மாய்' என்ற பெயருக்குப் பறம்பு என்ற ஊரில் அமைந்துள்ள கண்மாய் எனப் பொருள் கொள்ளலாம். விசயநகர வேந்தர் காலத்தில் இக்கண்மாயின் பராமரிப்புப் பணிக்கென பணியாளர் இருந்ததையும் இக்கல்வெட்டி லிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இவ்வூரின் பெயரான 'பறம்பு' என்பதிலிருந்தே வடபறப்பு நாடு, தென் பறப்பு நாடு ஆகிய பண்டைய நாட்டுப் பிரிவுகளின் பெயர்கள் உருப் பெற்றுள்ளன எனலாம்.

## மேலூர்

கி.பி. 18ஆம் நூற்றாண்டில் முகமது யூசுப்கானால் மேலூரில் கோட்டை ஒன்று கட்டப்பட்டுள்ளது. கேப்டன் ரும்லி மேலூர்ப் பகுதியில் இரண்டு முறை தாக்குதல் நடத்தி ஏறத்தாழ 5000 பேரைக் கொன்றுள்ளார். கலோனல் வில்லியம் புல்லர்ட்டன் 1783 அளவில் மேலூர்ப் பகுதியைத் தாக்கியுள்ளார். அமெரிக்கன் மதுரை மிஷன் என்ற கிறித்தவ சமயப் பிரிவின் மையம் மேலூரில் 1857 அளவில் அமைக்கப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து மேலூரில் அமெரிக்கன் மிஷன் பள்ளியும் உருப்பெற்றது. மேலூரில் 1879 லிருந்து மருத்துவமனை செயல்பட்டு வருவதும் குறிப்பிடத்தக்கது.

## மாங்குளம்

*மதுரை மேலூர் சாலையில் மதுரைக்குக் கிழக்கே 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது மாங்குளம் என்னும் சிற்றூர். இவ்வூரில் உள்ள மலை 'கழுகுமலை' என்றும் 'ஓவாமலை' என்றும் பெயர் பெறுகிறது. இங்கு நான்கு இயற்கையான குகைகளில் சமணத் துறவியர் வாழ்ந்துள்ளனர். இங்குப் பிராமிக் கல்வெட்டுகள் வெட்டப் பட்டுள்ளன. இக்கல்வெட்டுகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இவையே தமிழகத்தில் கிடைக்கும் கல்வெட்டுகளுடன் மிகத் தொன்மையான வையாகும். சங்க காலப் பாண்டிய மன்னர்களில் நெடுஞ்செழியன் எனப் பெயர் கொண்டவர்கள் இருவர். அவர்களில் ஒரு மன்னன் இங்குக் கற்படுக்கைகள் செய்து கொடுத்ததாக இங்குள்ள கல்வெட்டு கூறுவது முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.*

1. கணிய் நந்த அஸிரிய் இ குவ் அன்கே தம்மம் இத்தாஅ நெடுஞ்சழியன் பணஅன் கடல்அன் வழுத்திய் கொட்டுபித்தஅ பளிஇய்

2. கணிய் நந்தஸிரிய் குஅன் தமம் ஈதா நெடுஞ்சழியன் ஸாலகன் இளஞ்சடிகன் தந்தைய் சடிகன் சேஇய பளிய்

3. கணிஇ நதஸிரிய் குவன்... வெள்அறைய் நிகமது காவிதிஇய் காழிதிக அந்தை அஸுதன் பிணஉ கொடுபிதோன்

4. கணிய் நத்திய் கொடிய்அவன்

5. சந்தரிதன் கொடுபிதோன்

6. வெள்அறை நிகமதோர் கொடிஓர்

*மன்னன் நெடுஞ்செழியனும் அவனுடைய சகலன் இளஞ்சடிகனும் அவனுடைய தந்தை சடிகனும் கற்படுக்கைகள் அமைத்துக் கொடுத்தனர். இவர்கள் தவிர வெள்ளறை என்னும் கிராமத்தைச் சேர்ந்த வணிகக் குழுவினர் (நிகமம்) கற்படுக்கைகள் அமைத்தனர். வெள்ளறை என்பது இப்போது வெள்ளரிப்பட்டி என்னும்*

பெயரில் வழங்கப்படுகிறது. சந்தரிதன் என்னும் செல்வந்தனும் இத்தகைய தானத்தைச் செய்துள்ளான். இங்குச் செங்காவியில் எழுதிய தொன்மையான ஓவியக் குறியீடுகளும் கிடைத்துள்ளன.

## அரிட்டாபட்டி

மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் அமைந் துள்ளது இச்சிற்றூர். மதுரையிலிருந்து திருச்சி செல்லும் சாலையில் 25 கிலோ மீட்டர் தொலைவில் சற்று உள்ளடங்கி அமைந்துள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகும். இவ்வூரில் இரண்டு தமிழ் பிராமிக் கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை இரண்டும் கி.மு. 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கணிக்கப்பட்டுள்ளன.

இங்குள்ள கழிஞ்சமலை என்னும் மலைத் தொடரில் இயற்கையாக அமைந்த குகையில் சமணர் உறைவிடம் உருவாக்கப்பட்டு அதன் நெற்றியில் இவ்விரண்டு கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. பொது மக்கள் இக்கற்படுக்கைகள் கொண்ட குகையைப் பஞ்சபாண்டவர் படுக்கை என அழைக்கின்றனர்.

1. நெல் வெளிஇய் கிழிவன் அதினன் வெளியன் முழாகை கொடுபிதோன்
2. இலஞ்சிய்எளம் பேராதன் மகன் எமயவன் இவ் முழஉகைய் கொடுபிதவன்

என்பன இங்குள்ள தமிழ் பிராமிக் கல்வெட்டுகளின் பாடம் ஆகும். சங்ககாலப் பாண்டியர்களின் பேராதரவில் இக்கற்படுக்கைகள் கொடையளிக்கப்பட்டுள்ளன என்பதைக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

இக்குகைக்கு வலதுபுறமாக சுமார் 20 அடி தொலைவிலேயே பாறையில் மகாவீரர் சிற்பம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது. அதன் கீழ் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றும் செதுக்கப்பட்டுள்ளது.

1. ஸ்ரீ திருப்பிணையன் மலைப் பொற்
2. கோட்டுக் கரணத்தார் பேரால்
3. அச்சணந்தி செயவித்த தி
4. ருமேனி பாதிரிக் குடியார் ரக்ஷை

என்ற இக்கல்வெட்டின் மூலம் இவ்வூரின் பெயர் பாதிரிக்குடி என்பதும் இம்மலை திருப்பிணையன் மலை எனப் பெயர் பெற்றிருந்தது என்பதும் பெறப்படுகிறது. மதுரைப் பகுதியில் கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டின் சமணம் மறுமலர்ச்சி பெற்று எழக் காரணமாக இருந்த அச்சணந்தி என்னும் துறவியே இச்சிற்பத்தையும் உருவாக்கியுள்ளார். பொற்கோட்டுக் கரணத்தார் என்னும் ஒரு குழுவினர் பேரால் இச்சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் மீது நுண் சுதை பூசப்பட்டு ஓவியமும் தீட்டப்பட்டுள்ளது. பண்டைய ஓவியக் கலைக்கும் இவ்வூர் சிறிய பங்களிப்பைத் தந்துள்ளது.

இவ்வூரில் கழிஞ்சமலையின் இன்னொரு பகுதியில் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த குடைவரைக் கோயில் ஒன்று அமைந்துள்ளது. இன்று இப்பகுதி மக்களால் இடைச்சி மண்டபம் என்று அழைக்கப்படும் இக்கோயில் தமிழக அரசின் தொல்லியல்துறையால் வரலாற்றுச் சின்னமாக அறிவிக்கப்பட்டுச் சிறப்பாகப் பராமரிக்கப்பட்டு வருகிறது. இக்குடைவரை ஒரு சிறிய சதுரமான கருவறையுடனும் சிறிய முன்மண்டபத்துடனும் அமைக்கப்பட்டுள்ளது. இரண்டு வாயிற்காவலர்கள் சிற்பங்களும் பக்கத்திற்கு ஒன்றாக அமைந்துள்ள மாடங்களில் வலப்புறம் இலகுலீச சிவன் சிற்பமும் இடப்புறம் விநாயகர் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளன.

இக்கோயிலின் கட்டடக் கலை அமைப்பாலும் சிற்ப உருவ அமைதிகளாலும் இது கி.பி 7-8 ஆம் நூற்றாண்டில் முற்பாண்டியர்களால் அமைக்கப்பட்டது எனக் கருதப்படு கிறது. இங்குள்ள லகுலீசர் சிற்பம் தமிழகத்திலேயே எங்கும்

காணப்படாத ஒன்றாகும். சுகாசனத்தில் அமர்ந்து ஒரு கரத்தை தொடை மீது வைத்தும் ஒரு கரத்தில் தண்டம் ஒன்றைத் தாங்கியும் உள்ளார். லகுலீச பாசுபதம் என்னும் சைவ சமயப் பிரிவு கி.பி. 7-8ஆம் நூற்றாண்டளவிலேயே பாண்டிய நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்தமைக்கு இது சான்றாகும்.

மேலும் இவ்வூரில் முற்றிலும் சிதைந்து அடித்தளம் மட்டுமே எஞ்சிய நிலையில் சிவன் கோயில் ஒன்று உள்ளது. இதன் அடித்தளத்தில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விக்கிரம பாண்டியன் காலக் கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டின் மூலம் இவ்வூர் பாதிரிக்குடி என்பதும் இதன் மாற்றுப் பெயர் ஐநூற்றுவப் பெருந்தெரு என்பதும் அறியப்படுகிறது. இவ்வூர் தென்பறப்பு நாடு என்னும் நாட்டுப் பிரிவினுள் அமைந்திருந்தது.

இச்சின்னங்களின் மூலம் இவ்வூரின் வரலாறு கி.மு. 3 ஆம் நூற்றாண்டு முதலே தொடங்குகிறது என்பதையும், சைவமும், சமணமும் தழைத்திருந்தன என்பதும் உணரப் படுகிறது. கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வணிகமும் செழித்து வளர்ந்துள்ளது என்பதும் அறியப்படுகிறது. சமய வரலாற்றிலும் கோயில் கலை வரலாற்றிலும் இவ்வூருக்கு முக்கியப் பங்கு உள்ளது.

## அருவிமலை

மதுரை - திருச்சி நெடுஞ்சாலையில் கருங்காலக் குடிக்கருகில் அருவிமலை என்றழைக்கப்படும் செங்குத்தான மலை உள்ளது. இம்மலையின் உச்சியில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பிற்காலப் பாண்டியன் கோயிலொன்றுள்ளது. இக்கோயிலுக்குச் செல்ல சில இடங்களில் படிகள் வெட்டப்பட்டுள்ளன. இங்குள்ள கல்வெட்டுக்களிலிருந்து இக்கோயிலிலெழுந்தருளியுள்ள இறைவனுக்குத் 'திருமேலழகிய பாண்டிய நாயனார்', 'திருமேலாழி நாயனார்', 'திருமேலாழி ஆண்டார்',

'திருமேலாழியாண்ட நாயனார்' என்று பெயர்கள் வழங்கி வந்திருப்பதையும், ஊர்ப்பகுதிக்குப் பாக்குடி என்ற பெயர் வழங்கி வந்திருப்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது. இந்தப் பாக்குடி வட பறப்பு நாட்டுப் பகுதியிலமைந் திருக்கிறது. 'அருவிக்குடி' என்ற ஊர்ப் பெயரும் கல்வெட்டில் காணப்படுகிறது. இப்பெயரை ஒட்டியே இன்று இம்மலைக்கு அருவிமலை என்ற பெயர் வழங்கி வருவதாகக் கருதலாம்.

சிவன் கோயிலுக்குச் செல்லும் வழியில், மலையின் செங்குத்தான பகுதியில் எளிதில் ஏறிச் செல்வதற்காக வெட்டப்பட்டுள்ள படிகளுள் பதினைந்து படிகளைக் கண்டக நாடாழ்வானான ஆலால சுந்தரப் பெருமாள் என்பவரும், பதினேழு படிகளைக் கோதை சாத்தன் என்பவரும் வெட்டுவித்துள்ளனர். அருவிமலைப் பகுதியிலுள்ள பழிப் பிணிக் கண்மாய்ப் பகுதியில் 'அணிஞ்சான் பெரும்மாளான கண்டக நாடாழ்வான் பேர்' என்ற வாசகம் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டு உள்ளதிலிருந்து பதினைந்து படிகளை அமைத்த அதே கண்டக நாடாழ்வானே அவன் பெயரால் இப்பழிப்பிணிக் கண்மாயையும் அமைத்துள்ளார் எனக் கருதலாம்.

பிற்காலப் பாண்டியரின் ஆட்சிக் காலத்தில் அருவிமலை மீதுள்ள சிவன்கோயில் சிறப்பான நிலையில் இருந்துள்ளது. முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் தட்டார்கள் இருவர் அம்மாண்டி ஏரிப் பகுதியில் இக்கோயிலுக்கு நிலமளித்துள்ளனர். இதே குலசேகரனின் ஆட்சிக் காலத்தில் தச்சர்கள் சிலரும் இக்கோயிலுக்கு நிலமளித்துள்ளனர். இக்கோயிலிலுள்ள பிற்காலப் பாண்டியன் கல்வெட்டுக்கள் பலவும் இக்கோயிலுக்கு நிலம் வழங்கப்பட்ட செய்திகளைத் தெரிவிப்பதால், 13ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் இக்கோயில் சிறப்பான நிலையிலிருந்துள்ளமை உறுதியாகிறது.